ARUDRADARISANAM NUMBER.

**"The Viveka Chintamani is a Moral Force." "It is a Spiritual Gem." Regd.—No. M. 108.**

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys,

Vol. XX.] பரீதாபி ஹூ JANUARY, 1913. தைமீ [No. 10.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

**DEVOTED TO THE DIFFUSION OF LIGHT AND KNOWLEDGE.**

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW
AND TAMIL MONTHLY,
ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.
**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS.



அட்டவணை.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**

Overland 8 Annas extra.] *Lalitâlaya, 19, Adam St, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.

**For the** *LALITA PUBLISHING Co.,* **Sole Agents and Managers.**

Thin Paper Edition for the people.] **Regd. as a 'Book' and Copyrighted.** [Subscription Price: Yearly Rs. 4

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

### பழனிஸ்தலம்.

### பழனியாண்டவர் உத்ஸவங்கள்

I. தைமீ—தைப்பூசம் (பூசத்தில் ரதாரோஹணம், த்வஜாரோஹணமான 7-ம் நாள்) பின்னும் மூன்றுநாள் உற்சவமுண்டு.

II. பங்குனிமீ—பங்குனி உத்தரம் உத்தர நாளில் ரதாரோஹணம், த்வஜாரோஹணமான, 7-ம் நாள் பின்னும் மூன்றுநாள் உற்சவமுண்டு.

III. வைசாகமீ-விசாகத்தில் ரதாரோஹணம்.

IV. கந்தர் சஷ்டி.

## The "Vivekachintamani."

The October number of this interesting and instructive Tamil Magazine opens with a spirited article which affirms the truth of the principle in the Maxim "the undedicated life and undisciplined mind lead to evil." It is followed by an interestihg sketch of Sri Sankara "The Orphan's Cry" is highly spiritual in its tone as also the article on A O. Hume. Under the headline "The Kinglom of God within,"the Origin of Life"is discussed with an intellegent grasp of the first principles involved. Other articles of interest are :—"Wisdom is all-powerful," the constitution of Man: Easy Lessons in Economics; Historical Selection; and Gleamings from Folklore.

The magazine, we are glad to note, is maintaining its unique position as a journal of recognised spiritual and moral force, and we foresee a large scope for its usefulness in the moral and spiritual line, in which it stands foremost. The publishing agency deserve a word of commendation for their zeal in working up the journal to its original position—*The Indian Patriot.*

மார்கழிமீ 6உ முக்கோடி ஏகாதசி. 10உ ஆருத்திரா தரிசனம். 29உ போகிப்பண்டிகை.



*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். **20.**] **1913**வூ ஜனவரிமீ, பரீதாபிவூ தைமீ [சஞ்சிகை. 10.

## NOTICE.

The Editor of the *Virekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swaminathaiyar, Editor, & Founder V. C.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

S. Sabrahmaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொதுக்கும்.

2. உழைக்கும்வழியுணராது பிழைக்கவழி தேடுமெ சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கேயுரிமையாமென்று சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்மய விவேகவிளக்கப்பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்மவிக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவர் பாடஅது படுவர்: இகபரமிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றே நினுன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டாண்டிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓ.




## The Worship of the Ishta Devata.

## இஷ்டதேவதா உபாஸனை.

———:(*):———

"கொட்டுக்குந்தாலியிரண்டேயிரண்டிற்குங்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைவலிதென்பர்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைக்குமூன்றிற்கு
மிட்டம்வலிதென்பரீசனருளே."—திருமந்திரம்.

"கொட்டுக்குந்தாலி" யென்றால் மண்வெட்டுகிற கொட்டும் மரம்வெட்டுகிற குந்தாலியுமாம். பாரையென்பது "கட்டப்பாரை." இது வலுத்த பாறுந்தரையையும் பிளக்கும் வலியுள்ள கூராயுதம். இந்தமூன்று ஆயுதங்களும் சேர்ந்து வெட்டுக்குத்து ஆயுதங்களாம். மண்ணின்வலி மண்கொட்டால் கெடும். மரத்தின்வலி குந்தாலியால் கெடும். குன்றின்வலி கட்டப்பாரையால்கெடும். மண்ணைவிட மரமும் மரத்தைவிட குன்றும் வலியிற்சிறந்ததாம். அப்படியே மண்கொட்டைவிட மரக்குந்தாலியும், மரக்குந்தாலியை விடக் கட்டப்பாரையும் வலியிற்சிறந்ததாம்.

மனம் ஒருவழிப்பட்டது மந்திரம். ஒருவழியென்றால் ஒப்பற்ற உய்யும்வழி. அதுவேநேர்வழியென்றும் சொல்லப்படும். மனம் என்பது பூமிக்குச்சமானம். அது பொன்விளை பூமி. அதிலிருந்துண்டாவது கற்பகவிருக்ஷம். அந்த விருக்ஷத்திலும் உயர்ந்ததும் சிறந்ததுமா யுள்ளது குணக் குன்று. இது பெருத்துவளர்ந்தால் மேருமலையாகும்.

"பொன்விளைபூமியில்நெல்விளைநாற்றிட்டு
நல்வினையாமந்தவல்வினைப்பயிர்செய்யக்
கொல்வினையாமந்தக்குற்றமுற்றறுத்துள்ளே
வெல்வினையாம்நல்லவன்னப்பாலமுதாமே."—

என்பது ஆன்றோர்வாய்ப்பிறந்த அருள்மொழி.

நற்குண நற்செய்கை யிரண்டுமில்லாதார்க்கு நாம் சொல்லத்தக்கது ஒன்றுமில்லை. சொன்னாலும் பயன்படாது. சொற்பயனும் பொல்லாப்பாம். ஆகையால் அவர்களை அறவே தள்ளிப் பேசுவோம். சொற்குணமறிந்து சொல்லைக் கிரகிக்கத்தக்கவர் சுபாவத்தில் நல்லவராவர். "நெல்லுக்குமியுண்டு நீருக்கு நுரையுண்டு புல்லிதழ் பூவுக்குமுண்டு." ஆகையால் சொல்லென்றுபிறந்தால் அதற்கு "குணம்குற்றமிரண்டு முண்டாகும். குணநாடிக் குற்ற முநாடி மிகைநாடி மிக்கக் கொளல்" என்றார் பெரியோரும். திருடனுக்குத் தோன்றும் திருட்டுப்புத்தி: குருடனுக்குத்தோன்று மிருட்டுவழி. ஆகையால் குற்றத்தைக்களைந்து குணத்தைக்கிரக்கவேண்டும். களைபிடுங்கின நாற்றே பயிராகிப்பலனைத்தரும். குற்றங்களைந்த பின்னரேகுணமும் மணமாகும். நற்றவமில்லாதார்க்கு பவமெலாம் அவமேயாகும். ஆகையால் குணப்பயிர்செய்யக் காடுவெட்டிக் களைபிடுங்கிக் குன்றெடுத்துக் குற்றம் நீக்கவேண்டும். அதற்கு வழியென்னவோ அதைத்தேடிப்பிடித்து அவ்வழியில் நடக்கவேண்டும்.

மேற்சொன்னபடிகுணப்பயிர்செய்ய(to cultivate character) உபயோகிக்கும் ஆயுதங்களில் உபயோகத்தால் சிறந்தது இரண்டே. அவை: களைபிடுங்கும் மண்கொட்டும், காடு வெட்டும் குந்தாலியுமேயென்பான் "கொட்டுக்குந்தாலியிரண்டே" யென்றார். காடுவெட்டிக் களைபிடுங்கினாலும் குன்றெடுத்துக்குற்றம் நீங்கவேண்டும். கற்பாரைகள் புதைந்து கிடப்பனவெடுத்து நிலத்தைப்பண்படுத்தல்வேண்டும். ஆகையால் வன்மைபற்றி இவைகள்சக்தியாயுதங்களாம். கொட்டுக்குந்தாலியிரண்டே குணப்பயிர்செய்வதில் பொன்விளைநிலமாம் மனத்தைப் பண்படுத்துவதற்கு இன்றியமையாத சக்தி யாயுதங்கள். இவைகளைக்கரும்பு, பாசஎன்னும் தேவி ஆயுதங்களில் காணலாம். உப்புக்கரிக்கும் பேய்க்கரும்பு ஒன்றை

க்கையில் கொடுத்து இந்தக் கரும்பு தித்தித்தவி டத்தில் உனக்கு சித்தியென்று பட்டணத்துப் பிள்ளையை வழிப்படுத்திவிட்டார் அவருடைய குருநாதர். பரசுராமர் பரசு கையேந்தித் தோள் வலி மிகுதியால் கர்வங்கொண்டவர்களான க்ஷத் திரியர் குலத்தையறுக்கப்பிறந்தார். இதிலிருந்து நாம் அறிவதென்ன! பட்டணத்துப்பிள்ளையைப் போல்துறவுபூண்டுமனத்தைப் பண்படுத்துவது ஒன்று. இது மண்கொட்டால் பூமியைக்கிளறிக் களையெடுப்பது போலாம். "Spiritual is greater than material force" என்றபடி பூதசக்தியிலும் ஆத்மசக்திபெரிது என்பதைக் காட்டி நிலைநாட்டுவான் பிராமண குலதிலகரான பரசுராமர் பரசு கையேந்தித்திரிந்தார். இத் தென்னாட்டிலே பெறிபத்தநாயனுரும் அப்படி யே அக்கிரமத்தை யடக்குவான் பரசு கையேந் தித் திருத்தொண்டு பூண்டுழைத்தார்.

காடழித்துக் கரும்பு பயிர்செய்தாலும்—அதா வது, புத்தியின் சலனத்தை யறுத்து வஸ்து நிச்சயத்தி லூன்றிய ஸ்திர புத்திபோடு அசுத்த மனத்தைக் திருத்தி மண்கொட்டினுல் களைபிடுங்கி சுத்த மனதாம் ஸத்திய சங்கல்பங் கள் நிறைந்த கரும்புத்தோட்ட மாக்கினுலும் அந்தக் கரும்புத் தோட்டத்தை யானை வந்தழிக் காமல் பாதுகாக்கவேண்டும். "யானை மும்மதங் கொண்டால் யாரே யடக்கலாகும்?" என்பது திருமந்திரம். அதற்கு அங்குசம் அடக்குங் கருவியாயினும் மும்மதங் கொண்டபோது அதை யங்குசத்தாலும் அடக்குதலாகாது. ஆத லால் சித்தவிருத்தி யென்கிற மதங்கொண்ட யானையை நிரோத மென்கிற கட்டப்பாரையால் குத்திப்பிளந்து அதன் மதத்தையடக்கவேண் டும். ஆதலால் சித்தவிருத்திநிரோதவித்தி யாகிய யோகமே கல்மனதையும் கரைத்துப் பண் படுத்துவதற்கேற்ற கருவியாகும். இந்த யோகவித்தியாகிய சித்தவிருத்திநிரோதங்கை வந்தாலும் ஈசனருளின்றி அது நிலைத்து நிற்காது. இந்த ஈசனருள் எண்ணினர்க் கெண் ணினபடியிருந் தருள்பாலிப்பதால் அதுவே இஷ்ட தேவதையாகும். அந்த இஷ்ட தேவ தையானது, ஈசனருள் உபாஸகனின் சித்தசுத் தியிற்புகுந்து அவன் பஜிக்கிற திருவுருவங்கொ ண்டு அவனுக்கு மட்டும் தோன்றி அருள்பா லிப்பதாகும். இந்த இஷ்டதேவதாஉபாஸனையா னது வித்திமுத்தி யெல்லாவற்றையுங் கொடுக் கும். ஸ்ரீசங்கரர் மண்டன பண்டிதரோடு வா திட்டு ஜயித்தபோது ஸரஸ்வதி யம்சமாகிய உபயபாரதியார் தான் மண்டனருடலிற் பாதி யாதலால் தன்னையும் தர்க்கத்தில் வென்று லன்றி அவருடைய வெற்றி பூரணமாகாது என்று சொல்ல, அதைக் குற்றங்களைந்து குணங்கொண்டு கிரகித்த ஸ்ரீசங்கரர் அப்படி யே வாதுக்குடன்பட, அவர் பல கேள்விகளும் கேட்டபின்னர் காமகலா சாஸ்திரத்தைப்பற் றிய தத்துவங்களை யுசாவினர். சங்கரர் அமர ராஜன் உயிர்போன உடலிற்புகுந்து அவ்வரச னது மனைவிமார் நூற்றுவரோடும் பழகிக் காம கலா ரஹஸியங்களையுணர்ந்து அமரகமென்னும் நூலியற்றியபின், உபயபாரதியார் தம்மையு மவர் வென்றதை யொப்புக்கொண்டு தாம் பூமி யில் அவதாரமான கர்மம் முடிந்ததால் ஸத்திய லோகத்துக்கு ஆகாச மார்க்கமாகக் கிளம்பிப் போகையில் ஸ்ரீசங்கரர் துர்க்கை மந்திரத்தால் பாரதியைக் கட்டி அவர் யந்திர ஸ்தாபனம் செய்யு மிடங்களிலிருந்து அவர் சித்தங் குடி புகுந்து அவருக்குப் பிரத்தியக்ஷ தேவதை யாகத் தோன்றி யருள்புரிய வேண்டுமென்று கோர, அப்படியே யிருந்து இசைவாராயினர். இதுதான் இஷ்டதேவதா உபாசனை வித்தி.

ஜோதிமத்தியிலுள்ள சுத்த மனஸாக்குள்ளிரு க்கும் தஹராலயத்தில் வசிக்கும் இஷ்டதேவ தையை உபாஸனைக் கிரமப்படி வந்தித்துத் தி யானித்து உபாஸிப்பதாகிய தியானயோக ஸமாதியில்,—

"கற்பனையற்றுக்கனல்வழியேசென்று
சிற்பனையெல்லாஞ்சிருட்டித்தபேரொளிப்
பொற்பினைநாடிப்புணர்மதியோடுற்றுத்
தற்பரமாகத்தகுந்தண்சமாதியே."

என்ற திருமந்திரோபதேசப்படி பாவசமாதி கைகூடி வந்தவர்களுக்கு இஷ்டதேவதானுக்ரகம் எப்போதும் உண்டாம். இது உபாஸனைவழியிலிருந்து தேர்ந்தவர்களுக்கு நிதரிசனமாய் விளங்கும். இப்பொழுது ஆதியில் எடுத்துக் கொண்ட திருமந்திரத்தின் பொருள் விளங்குகிறதா பாருங்கள்!

"கொட்டுக்குந்தாலியிரண்டேயிரண்டிற்குங்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைவலிதென்பர்
கொட்டுக்குத்தாலிக்கும்பாரைக்குமூன்றிற்கு
மிட்டம்வலிதென்பரீசனருளே."

"மனமாயைமாயையிம்மாயைமயக்க
மனமாயைதான்மாளும்மற்றொன்றுமில்லை
பினையாய்வதில்லைபிதற்றவும்வேண்டாம்
தனையாய்ந்திருப்பதுதத்துவந்தானே."

இந்தத் தத்துவங்கைவந்தார் தத்துவஞானிகள் என்றும் தத்துவதரிசிகளென்றும் சொல்லப்படுவார். இவர்கள்தான் குணப்பயிர் (Cultivation of Character) செய்யவல்லவராவார். அதற்கு இன்றியமையா ஆயுதங்கள் (உபகருவிகள்) "கொட்டுக்குந் தாலியிரண்டே." இந்த இரண்டுக்கும் கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர். தனித்தனி இவைமூன்றிற்கும், மொத்தமாய் இம்மூன்றின்வலிக்கும் அதிகமான வலியுடையது ஒன்றுண்டு. அதுதான் (Spiritual Force) இஷ்டம் என்று சொல்லும் இஷ்டதேவதை. இந்த இஷ்டதேவதை ஈசன் அருளேயன்றிவேறில்லை. ஆகையால் இஷ்டதேவதா உபாஸனையானது ஹிருதயசுத்தி வித்தித்தவர்களுக்கு அருட்பிரஸாதத்தால் அருள்வழிப்பட்டு நடக்க ஏற்றதோர் உத்தமஸாதனமாம்.

'அநந்யாச்சிந்தயந்தோமாம்ஹேஜநாப்பர்யுபாஸதே
தேஷாம்நித்யாபி யுக்தாநாம் யோக க்ஷேமம் வஹாம்ய
[ஹம்"

என்ற பகவத் வாக்குப் பொய்க்காமல், அந்யசிந்தையில்லாமல் தன்னையாரொருவர் மிகப்பரிந்து இடைவிடாத சிந்தையினால் உபாஸிக்கிறார்களோ அவரது யோகக்ஷேமத்தை யெல்லாம் நான் வஹிக்கிறேன் என்று கொடுத்த ஸத்தியவாக்குப்படி பகவான் குமார மூர்த்தியாக வந்து குமார ஸம்பவங் கொண்டாடச் செய்து 9-நாளிருந்து நவசக்தியையுமளித்து பத்தாம்நாள் பாரை விட்டோடியொளித்துப் பின்னுமோர் நவராத்திரியானபின் மாயையைக் கொண்டு மிக்க ஜாலம் பல செய்து ஷஷ்டி யிலத்துவா ஆறும் பூரணமானபின், பத்துக்கொண்டாடி பத்தைப் பறித்து பதரா மனத்துடன் வாரமோர் நாளேழும் வாழ்வினி யுனக் குண்டென்று பிட்டுக்கு மண் சுமந்த பிஞ்ஞகனார் வழிபற்றி பூபாரந் தாங்கி நீ பூபதியாய் மண் சுமப்பாய் என்று கடினமாம் கட்டளையை நூதனமாய்ப் பிறப்பித்தார்.

மண்சுமந்த பூபதியாம் மஹாபலியின் தலையிலன்று
விண்சுமந்த வைகுண்ட வாமனன் உலகளந்து
தண்சுமந்த சடைமுடியார் தரையிலூன்றப் பெற்ற
[பாதம்
பெண்சுமந்த ஸ்ரீ மார்பன் ஊன்றவைத்த கோலமா
[னேன்."

திரிசங்கு ஸ்வர்க்கத்திலும் மஹாபலியின் நரகம் நலமென்றே நானுவந்தேன்.

"பிட்டுக்கு மண்சுமந்த பிஞ்ஞகனார் அருள்பெறவே
மட்டுக்குமிஞ்சி மனங் கல்லாய்ச் சமைபலூற்று
றெட்டுக்கு முள்ளிருந்து 'எனை'யாட்டிவைத்தவண்
[ணம்
கட்டுக்குமிஞ்சியவன் கடுங்காவல் விதித்தானம்மா!"

குமார குருபரன் திருவடி சரணம்.

வேலுமயிலுந் துணை.

———:*:———

## Working for the Good of Mankind.

### "மன்பதை செப்பஞ்செயல்."

"இன்பமுந் துன்பமு நாட்டாரிடத்துள
நன்செயல் புன்செயலாலந் நாட்டிற்கா
மென்ப இறை நாள்தொறும் நாட்டினில்
மன்பதை செப்பஞ்செயில் வையம் வாழுமே"

—திருமந்திரம்.

"நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை." நாடெங்கும் வாழவைப்பது எப்படி? மனிதர்கள் குணம் நடத்தை இவைகளை நாள்தோறும் செப்பம் செயலால் வையம் வாழும். இப்படி மன்பதை செப்பஞ்செய் தொழிலும் கடமையும் யாருடையது? முக்கியமாய் அரசன் கடமையாம். ஏனெனில் அரசனே நாட்டுக்குத் தலைவன். ஒரு நாட்டில் இன்ப துன்பங்கள் மலிந்திருப்பது அந்த நாட்டாரிடத்துள நன்செயல் புன்செயலால். ஆதலால் அரசன் நாட்டுவளப்பத்தை யன்றி "குடியுயரக் கோனுயரும்" என்பதை யுன்னிக் குடிகளிடத்தில் நன்செயல் மலியச் செய்யவேண்டும். நன்செயல் மலிந்தால் இன்பமும் புன்செயல் மலிந்தால் துன்பமும் அந்த நாட்டிற்குளதாம். இதையறிந்து மனிதர்கள் நடத்தையை நாள்தொறும் செப்பஞ்செய்ய வேண்டியது அரசன் கடமை. "யதாராஜா ததாப்பிரஜா" அரசனெவ்வழி குடிகளவ்வழி. அரசியல் கோணில் எல்லாம் கோணும். ஆகையால் செங்கோல் ஓங்கச் சிருடன் அரசன் குடிகளைப் பரிபாலனம் செய்யல் வேண்டும். பரிபாலனத்தில் சிஷ்டபரிபாலனமும் துஷ்டநிக்ரகமு மடங்கும். துஷ்டநிக்ரகமின்றிச் சிஷ்டபரிபாலனம் செய்ய முடியாது. "அரசன் அன்றுகொல்லும் தெய்வம் நின்றுகொல்லும்." தர்மம் தவறாது நீதி வழுவாது அரசியல் நடத்தப்படல் வேண்டும். மனுநீதி கண்ட சோழன்கதையை வாசித்தவர்கள் இந்தியாவில் பூர்வ அரசர்களின் இராஜ்ஜிய தர்மம் எப்படி யிருந்ததென் றுணர்ந்துய்வார்கள். தர்மம் சரியாகப் பரிபாலிக்கப்படாவிட்டால் கர்மம் சரியாக நடக்காது. கர்மம் வழுவினால் தர்மமும், தர்மம் வழுவினால் கர்மமும் தவறும். ஆகையால்தான் சுருதி "ஸத்யம்வத, தர்மம்சர" வென்று முறையிடலாயிற்று. மன மொழி மெய்கள் மூன்றும் ஒத்திராவிட்டால் செய்தவமெல்லாம் அவமேயாம். திரிகரண சுத்தியில்லாவிட்டால் ஒரு காரணமும் உருப்படாது. "வாய்மையால் அஹம் தூய்மையாம்." மனத்தூய்மையில்லாவிட்டால் சங்கல்பம் ஸித்தியாது. வாக்கு சுத்தி யில்லாவிட்டால் மனத்தூய்மை கெடும். செய்கை (நடத்தை) சுத்தி யில்லாவிட்டால் வாக்கு, மனம் இரண்டும் பழுதுபடும். ஆகையால்தான் திரிகரண சுத்தி யெல்லாவற்றிற்கும் அவசியமென்பது. இந்தத் திரிகரணசுத்தி வாய்ப்பதுதான் அருமையிலும் அருமையா யிருக்கிறது இக்காலத்தில். பூர்வத்தில் பாராளும் மன்னவர்களும் வாக்குத் தவற அஞ்சினார்கள்: அதர்மத்துக் கிடங்கொடுக்க நடுங்கினார்கள். மஹாபலி சக்ரவர்த்தி வாமனருக்கு மூன்றடி மண்கொடுத்தபின் அவர் த்ரிவிக்கிரமராய் உலகெலாம் ஒரு அடியாலளந்து விண்ணெலாம் மற்றோரடியாலளந்து மூன்றாவது அடி யெங்கே வைக்கிறதென்ன, வாக்குத்தவறக் கூடாதென்று தலையைக்காட்டினார். இக்காலத்தில் பொய்யே மலிந்திருக்கிறது: ஏழைகளைவிடப் படித்தவர்கள் துணிந்து பொய் சொல்லுகிறார்கள். "பொய் சொல்லாவிட்டால் பிண்டம் அகப்படாது" என்கிறார்கள். ஏழைகளையும் கோர்ட்டுக்கிழுத்துப் பொய்சொல்லக் கற்றுக்கொடுக்கிறார்கள். இல்லாத பித்தலாட்டமெல்லாம் செய்கிறார்கள். நியாயவாதம் செய்கிறோமென்று லாயர்கள் தம் வயிற்றுப்பிழைப்புக்காக இல்லாத பொய் புனைசுருட்டுகளெல்லாம் கற்பிக்கிறார்கள். "பெரியமனுஷாள் கௌரவ" மென்பது பினல்கோட் அளவாகப்போய்விட்டது. ஏழைக

ளைப் பிடித்து வதைக்கிறார்கள். அடி பிடி சண்டையிட்டு அக்கிரமஞ் செய்துவிட்டுப் பொய் வழக்குத் தொடுக்கிறார்கள். மனச்சாக்ஷிக்கு அதிகாரம் போய்விட்டது. பொய்க்கக்ஷியும் பொய்வாதமும் வீண்வழக்கு வியாஜ்யங்களுக்குப்போவதும் ஜனங்களிடத்தில் பலித்து கிடக்கிறது. இதனால் புன்செயல் மலிந்து நாட்டில் துன்பம் அதிகரித்து வருகிறது.

“குடிஉயர”க் குணநலம் வேண்டும். வரப்புயர நீருயருமென்பர். ஜனங்கள் நியாயவரம்பு கடந்து நடந்துகொள்ளும்பொழுது, பிரகிருதி தர்மங்களும் தலை தடுமாறிப் போகின்றன. இது செய்நலமில்லாக் குற்றத்தாலென்று தெரிந்து மன்பதை செப்பஞ் செய்வாரில்லை. முன்காலத்தில் பாகவதர்களும் கதாப்பிரசங்கிகளும் பக்தர்கள், அடியார்கள் புராணங்களை யெடுத்துப் பிரசங்கிப்பதில் ஜனங்களுடைய குற்றங்குறைகளையெடுத்துக்காட்டித் திருத்திவந்தார்கள். இக்காலத்தில் அவர்கள் செல்வாக்கு அவ்வளவாகவில்லை. பகவத்காலக்ஷேபம்செய்யும் ஸாது ஸங்கப் பிரியர்களான பாகவதர்களுக்கு பதிலாகப் பொய்வழக் கெடுப்பார்க்குப் பிரியதூதர்களான சட்டம்படித்த வக்கீல்கள் மலிந்திருக்கிறார்கள். ஸர் ஆல்ப்ரெட் வைரால் இத்தகையார் செய்யும் பொய் புனைசுருட்டுகளைப்பற்றி யெழுதியுள்ளது ஓரம்சத்திலுண்மையே. நம் தேசம்செய்த பாபம் திரண்டு துர்வழக்கு வலியக்காரணமான “வாதநோவாளரை” மலியச்செய்து விட்டது. இந்தப் பாபகர்மம் வரவர வளர்கிறது. நைஷ்கர்மஸித்திபெற்ற புண்ணிய சீலர்கள் பொதுஜன க்ஷேமார்த்தம் மன்பதை செப்பஞ் செய்வானுழைப்பது கூடாமையாக விருக்கிறது. ஏனெனில் அக்கிரமக்காரர்களுக்கு அவர்கள் செல்வாக்குப் பெற்றேங்குவது கஷ்டமாயிருக்கிறது. பணமும் ஓடும் ஒன்றென்று நினைக்கும் ஸமரஸ சித்தர்கள் செய்கை பணத்தையே பெரிதாய் நினைத்துப் பணத்துக்காக உடல் பொருளாவியையும் தத்தம்செய் துழைப்பார்க்கு ஒவ்வா ததானே!

“இழிகுலத்தார் வேடம் பூண்பர்மேலெய்த
வழிகுலத்தோர் வேடம் பூண்பர்தேவர்க்
பழிகுலத்தாகிய பாழ்சண்டாளர்
கழிகுலத்தோர்கள் களையப்பட்டாரே.”—

யென்பது திருமந்திரோபதேசம். மேலும் காலவேற்றுமையால் மெய்தவஞ் செய்வாரைப் பார்த்துப் பொய்தவஞ் செய்வார் மிக மலிந்துள்ளார். இவர்களைப்பற்றித் திருமூலதேவர் பின்வரும் திருமந்திரம் ஓதியிருக்கிறார்.

“பொய்தவஞ்செய்வார் புகுவார்நரகத்துப்
பொய்தவஞ் செய்தவர் புண்ணியராகாரேற்
பொய்த்தவ மெய்த்தவம் போகத்துட் போக்கியஞ்
சத்தியஞானத்தாற் றங்குந்தவங்களே.”

வேட மெப்படியாயினும் உள்ளுணர்வை யுணர்ந்தறிந்தோர் உய்வழி கண்டுய்வர்.

“பொய்வேடம் பூண்பர் புசித்தற்பயனாக
மெய்வேடம்பூண்போர் மிகுமிச்சைகைக்கொள்வர்
பொய்வேட மெய்வேடம் போதவே பூணினு
முய்வேடமாகு முணர்ந்தறிந்தோர்க்கே.”

—திருமந்திரம்.

—:*:—

Heed not Greed, Guilty-selfishness and Inhumanity:

## They are Short lived.

“ஆட்டுக்கடா சண்டை ஏதுக்கடா?”

—:*:—

“அஜகஜாந்தரம்” என்கிற வசனம் கேட்டதுண்டே: அப்படி யென்றாலென்ன? அஜத்துக்கும் கஜத்துக்கு முள்ள வித்தியாஸம் என்பது பொருள். அஜம் என்றால் ஆடு. கஜம் என்றால் யானை. ஆடு அற்ப ஜந்து, யானை மஹத்தான உருவமுடையது. ஆட்டுக்கு மூளை சொற்பம், யானைக்கு மூளை மிகுதி. பரமசிவன் ஆனைத் தோலைக் “கரியுரி” யாகப் போர்த்துள்ளார். குஹப்ரஹ்ம மாகிய கந்தஸ்வாமி ஆட்டுக்கடா

வை வாஹனமாக வகித்துள்ளார். இவற்றின் பொருளென்ன?

"யானைவரும் பின்னே மணியோசைவரும் முன்னே" யென்பது பழமொழி. மணியோசை நாததத்துவத்தைக் குறிக்கும். அந்த நாததத்துவ முண்டானால் அதிலிருந்து நவசக்தியோடு கூடிய நவவ்யூகப் பிரபஞ்ச முண்டாகும். இந்தப் பிரபஞ்ச மாகிய யானையைத் தோலுரித்து (அதாவது, அதனாலுண்டாகும் பந்தங்களை நீக்கி)ப் போர்வையாகப் போற்றியுள்ளார் பரமசிவம் என்பது பொருள். உலகத்துக்கு வலுவுண்டானால் அது உலகஞானமாகப் பிரவிருத்திக்கும். உலகஞானம் பேதபுத்தியை ஆதாரமாகக்கொண்டுள்ளது. இந்தப் பேத ஞானத்தாலுண்டாவது கர்மபந்தமும் ஸம்ஸார துக்கமுமாம். இவ்விரண்டையும் தன்னுள்வைத்துக் கொண்டு இவற்றிற்குப் போர்வையாக விருப்பது "கரியுரி" யென்னும் இருள்பற்றிய அவித்யாரூபம். இந்த அவித்யா ரூபத்தை அதன் வலிகெடத் தோலுரித்து ஸ்வயஞ்சோதிவடிவாகிய பரமசிவம் தனக்குப் போர்வையாகப் போர்த்தி யிருக்கிறார். இதனுண்மையை உணர்ந்தார் அருட்குழவியாவர். "பூதமுதலாகவே நாதபரியந்தமும் பொய்யென் றெனைக்காட்டி" யென்ற பெரியோர் வாக்கால் மெய்யறிவுதயமாவது இந்தப் பொய்யறிவு (அறியாமை, அவித்தை) அறியப்பட்ட பின்னரே யாம். அறியாமையை அவித்தையென் றறியும் அறிவே மெய்யறிவு (வித்தை) யென்னப்படும். இதற்கு சுத்த வித்தையென்று பேர். இந்த சுத்த வித்தை கைவந்தோர் ஸ்ரீசக்ரதராவர். அந்த ஸ்ரீ சக்கரத்தை யறிந்தவர் எல்லா மறிந்தவராவர். அதிலுள்ள ஆவரண தேவதைகளே சமஷ்டி ஞானத்தை மறைத்துக்கொண் டிருப்பதால் அவை யானையுருவாம். அஜம், கஜம் இரண்டுக்குமுள்ள வித்தியாசம் க் என்னும் அக்ஷர மாத்திரமாம். "கம் ப்ரஹ்மகேவலம்" என்றதனால், கம் என்னும் (க்) அக்ஷரம் உபீதனகாரணமான தாமஸப் பிரதான ரூபியாகிய ப்ரஹ்ம கேவலத்தைக் குறிக்கும். இதையே சமஷ்டி தத்துவம் என்றும் சமஷ்டி காரணம் என்றும் சொல்லுவர்.

"கஜம்" என்பது சமஷ்டிதத்துவம் அல்லது சமஷ்டி காரணத்தைக் குறித்தால், "அஜம்" என்பது வியஷ்டிதத்துவம் அல்லது வியஷ்டி காரணத்தைக் குறிக்கும். சமஷ்டிக்கும் வியஷ்டிக்குமுள்ள வித்தியாஸம் தோப்புக்கும் மாத்துக்குமுள்ள வித்தியாஸமாம். ஆகவே கஜம் சமஷ்டி ஆவரணமானால் அஜம் வியஷ்டி ஆவரணமாம். ஆவரணம்=மறைப்பு. வியஷ்டி ஆவரணம் உள்ளத்துணர்வை மறைக்கும். "ஆட்டுக்குப்புத்தி பிடரியிலே" யென்பது பழமொழி. அதற்கு மூளை யதிகமாகவில்லையாதலால் அவித்யாரூபமான தேஹோஹ பாவத்துக் கிருப்பிடமான பிடரி (விசுத்தி ஸ்தானம்) வரையிலே அதற்கு அறிவுண்டாம். அதாவது தேஹோஹபாவம் உதிப்பதற்கு வேண்டிய அறிவுமட்டுமே யதற்கு உண்டாம். அதற்கு மேல் அறிய அதற்கு புத்தியோடாது. ஆட்டுக்கடா சண்டை பார்த்தவர்கள் அவை ஒன்றோடொன்று ஆக்ரோஷமாய் முட்டிக் கொள்வதைப்பார்த்திருப்பார்கள். அப்படி முட்டிக் கொள்வதால் பயன் என்னவென்று யோஜிக்கும் புத்தி யதற்குக் கிடையாது. ஆட்டுக்கடா சண்டையில் ஒன்றோடொன்று ஓடித்தாக்கி முட்டிக்கொண்டு தலையை உடைத்துக்கொண்டாலும், நம் தலை உடைந்ததேயென்று நிற்காது. இரத்தம் ஒழுக ஒழுகப் பின்னும் அவை யோடி யோடி யெதிர்த்து முட்டிக்கொண்டு சாகும். இதுதான் ஆட்டுக்கடா சண்டையின் முடிவு.

இந்த ஆட்டுக்கடாவைத் துவந்துவப்படுத்தி, "ஆட்டுக்கடா சண்டை எதுக்கடா?" என்று உள்ள முருக அன்புமிகுதியால் செப்பிய குருமொழியை ஒரு மொழியாகக்கொண்டு சிரவண,

மனன, நிதித்தியாஸமுறைபற்றி ஆய்ந்து பார்த்தால் அதனுள்ளுறை பரமகாருண்யம் வெளியாகும். அறிவிலிகள் இருவர் சண்டையிட்டுக்கொண்டு மண்டையுடைத்துக் கொள்கிறார்கள். இது ஒரு "ஆட்டுக்கடா சண்டை." அவர்களே சோற்றுப்படிப்பு படித்து, ஆட்டுக்கடா சண்டையில் இரத்தம் குடிக்கப் பார்க்கும் நரிபோல், சண்டை மூட்டிவிட்டு நடுவில் தாம் பிழைக்கும் வழியைப் பார்க்கும் கற்றறி மூடர் சகாயங்கொண்டு கோர்ட்டேறிச் சண்டையிட்டால் அதுவும் "ஆட்டுக்கடாசண்டையே"யாம். ஏனெனில் வழக்குத் தொடுத்தவன் ஜயித்தாலும் தோற்றாலும் கஷ்ட நஷ்டம் தன்னதேயாக அநுபவிக்க வேண்டும். ஆட்டுக்கடா சண்டையில் உதர நஷ்டமானால், கோர்ட்டுக் கச்சேரியேறிச் சண்டைபோடும் ஆட்டுக்கடா சண்டையில் உதர போஷணாதாரமான திரவியநஷ்ட முண்டாகிறது. இதிலும் மேலான இன்னொருவித "ஆட்டுக்கடாசண்டை" யிருக்கிறது. அது தத்துவ விசாரம் செய்கிறோமென்கிற வியாஜம் வைத்துக்கொண்டு சண்டப்பிரசண்டமாய் வார்த்தைகளைக் கொட்டி யளந்து கூடையில்வாரி மலையோடு மலை யெதிர்த்தாற்போல் விதண்டா வாதம் செய்கிறதேயாம். இவர்களும் பயனற்ற சண்டையே போடுகிறார்கள். ஏனெனில் தாயுமானவர் "வீறுவாதம் புகலுவாய் வாதநோவாளர்க்கு மெட்டாத முக்கனுடை மாமருந்துக் கமிர்தமே!" என்றபடி உண்மைஞானமாம் அமிர்தம் இவர்களுக்குக் கிடைப்பதில்லை. நாச காரணமான சண்டையேதான் இவர்களுக்குப் பிரதானம். ஆகையால் அடுத்தாரைத் தடுத்தாளும் குருநாதர் "ஆட்டுக்கடாசண்டை யேதுக்கடா?" என்று இரக்கமேலிட்டு அருள்மொழி கூறி இருள்வழி நீக்கித் தெருள்வழி காட்டுவாராயினர்.

உலகம் பேதபாவனையி லிருந்துண்டானது. பேதபாவனை அஜ்ஞான இருள்மயமான ஆட்டுக்கடா ரூபமாயுள்ளது. ஆட்டுக்கடா இரண்டு ஒன்றையொன்று கண்டதும் சண்டைபோட்டு மண்டை யுடையும்வரையில் முட்டிக்கொள்வது எதுகாரணத்தால் என்று ஆராய்ந்துப் பார்த்தால், பேதபாவனையைத் தவிர வேறொன்றும் காணப்படாது. இந்த பேதபாவனையை அடக்கியாள்வது மஹா துர்லபம். பிரம்மாதி தேவர்களாலும் முடியாதென்றால் மனுஷர்களால் முடியுமா?

ஆனால் மனுஷஜன்மம் எடுத்தது முக்தி வீடடையவன்றி ஸம்ஸார ஸாஹாரத்தில் எப்போதும் முழ்கிக்கிடக்க வல்லவென்பதை யுன்னிப் பார்த்தால், அந்த ஜென்ம ஸாபல்யத்தைப் பெறுவான் பாடுபட்டுழைப்போர் பேதபாவனையை முற்றும் வசப்படுத்த வேண்டும். அது வசமாகும்வரையில் ஜீவனுக்குத் துன்பமேயன்றி இன்பமில்லை. பேதபாவனையால் அநுபவிக்கும் சுகம் எல்லாம் பின்னால்வரும் துக்க மூட்டையைச் சுமப்பதற்கான அச்சாரமேயன்றி வேறல்ல. பேதபாவனை யற்றவிடத்து "துன்பமும் துக்கமும் இன்பசுக நீமூலாம்" என்கிற அபேததரிசனம் சித்திக்கும். "அபேத தரிசனம் ஞானம்" என்ற சுருதி வாக்குப்படி இந்த அபேத தரிசனமே ஞானோதயமாகும். இதை அருணாரூடா மூர்த்தியாகிய ஆட்டுக்கடா வாஹனமேறிய எம்பெருமான் சுப்ரமணியக்கடவுள் சிஷ்டர்கண்டுய்ய அவருக்கு இஷ்ட தேவதையாயிருந்து அஜாரூடராய் அவர்களுக்கு தரிசனமளித்து அருள்புரிகிறார். இதை விளக்க ஒரு திவ்ய கதையுண்டு. அதை யெடுத்துரைப்பாம்.

அஹத்தில் கண்டதே புறத்திலும் காணப்படுமாதலால் குமாரகுருபரனும் குஹக்கடவுளையும் அவரது திருவிளையாட்டாம் பராக்கிரமங்களையும் அஹமுகத்தே காணமாட்டார், பஹிர்முகத்தே யுணரல் ஆற்றாதவராவர். ஏனெனில் எமர்ஸன் (Emerson) சொல்லியபடி "Man sees as he is"—அஹத்திலுள்ளதையே புற

த்திற் காண்கிறான் மனிதன். அஹம் புறம் வேற்றுமை யற்றுப்போனால் விகாரமெல்லாம் ஒழிந்துவிடும். இதற்குப் பரம சாதகமாயுள்ளது திரிகரணசுத்தித் தவாரா லபிக்கும் இதய சுத்தியாம். ஏனெனில் குஹப்ரஹ்மம் இதயகமலத்திலேயுள்ள தஹராலயத்தில் வசிக்கிறார். அந்த தஹராலய தரிசனங்கண்டோர் அதையே கமலாலயமாகப் புறத்திற்கண்டு பூரிப்பார். புஷ்பிக்கும் பூவெல்லாம் "அக்கினிபூ" என்னும் சிவகுமாரன் பராக்கிரமங்களைக் கட்டியங்கூறி 'சுவாமி பராக்கு" என்று அறிவுறுத்தும் கட்டியக்காரர்களாக (Heralds) விளங்கும்.

குமாரகுருபரனாகிய எம்பெருமான் தஹராலயத்தி லெழுந்தருளித் திருநட்டஞ்செய்து திருவிளையாட்டுக் காட்டியபின் திருக்கயிலையாம் வெள்ளியங்கிரியின் முன் திருவாயிலின் கண்ணுள்ள மண்டபத்தில் நவ வீரர்களாகிய வீரவாகு, வீரதீரன், வீரபுரந்தரன், வீரமார்த்தண்டன் முதலிய துணைவர் ஒன்பதின்மரும் லக்ஷம் சேனைவீரர்களும் தம்மைப் புடைசூழ்ந்து போற்றிநிற்ப வீற்றிருந்தருளித் தரிசனம் தந்தார்.

அக்காலத்தே, ஸத்யவிரதம் பூண்டு, உண்மையை உரைப்பதால், கலகப்பிரியர் என்று பேர்பெற்ற தேவருஷியாகிய நாரதமகாமுனிவர் வேள்வி (யாகம்) ஒன்று செய்ய விரும்பினார். தேவர், முனிவர், அந்தணர், இந்திரன், பிரமன், விஷ்ணு முதலிய சகல கணத்தவர்களோடுஞ் சேர்ந்து பூவுலகின்கண் யாகசாலை வகுத்து, வேதசிவாகம விதிப்படி வேள்விசெய்யத்தொடங்கினார். அப்படி செய்துவருங் காலத்தே ஏகாக்ரப்பட்ட அவர் மனதில் மாறுபாடு உண்டாகநேரிட்டது. மனம் ஒருவழிப்பட்டது மந்திரமாதலால், மனதின் ஏகாக்ரநிலை கலையவே மந்திரமும் மாறுபட்டது. அப்படியுண்டான மந்திரமாறுபாட்டாலே, யாகாக்னியிலிருந்து "செக்கர்வானம் போன்ற" ஆட்டுக்கடா ஒன்று தோன்றியது. அதன் வடிவத்தையும், சினத்தையும் ஆரவாரத்தையும் கண்டு அங்குள்ளார் யாவரும் மிகத்திகிலடைந்து அஞ்சினர். அந்த ஆட்டுக்கடா யாகாக்னியிலிருந்து தோன்றியதை ஆராயுமிடத்து பூமியிலுள்ளார் தர்மமென்று பேர்சொல்லிக்கொண்டு செய்யும் அதர்மங்களும், கிரமமென்று பேர்வைத்துக்கொண்டு செய்யும் அக்கிரமங்களும், தவமென்று பேர் வைத்துக்கொண்டுசெய்யும் அவங்களும் தானே யுருவெடுத்து முன்னர்ப் பூமிபாரம் தீர்ப்பான் ஸ்ரீகிருஷ்ணன் அவதரித்தாற்போல, தர்மதேவதையின் குறைதீர்ப்பான் ஆட்டுக்கடாவாகத் தோன்றி பேதபாவனையாம் கலகத்தீமூட்டி யுலகையழிக்கத் துவஜம் கட்டிக்கொண்டு கிளம்பியதுபோல் இருந்தது.

திரிகரண சுத்தியில்லாது வாயொன்றுசொல்ல, மனதொன்று நினைக்கக் கையொன்றுசெய்ய —இப்படி தனக்குள்ளே யுண்டான மாறுபாடு விசேஷத்தால் "selfishness" என்னும் "ஆட்டுக்கடா" சிதக்னி குண்டமாகிய யாகாக்னியிலிருந்துண்டாகிறது. நாரத மஹாமுனிவர் (ஸத்ய ஸங்கல்ப விரதர்) இந்த யாகாக்னியை வளர்க்கும் யஜமானர். அவர் அத்தீயை வளர்ப்பான் செய்த வேள்வியில் உலகில் நடக்கும் அக்கிரம அநியாயங்களை யெல்லாம் திரிபுவன வாசியாகிய அவர் கண்ணுறக் கண்டகாட்சிவந்து அவர் ஏகாக்ரமனதைக் கலைக்க அச்சமயம் அவர் மனதிலுண்டான மாறுபாட்டால் மந்திரமும் மாறுபட்டு, மந்திரசித்தி பெற்ற அவர் செய்த ஆகுதி வீண்போகாது "செக்கர்வானம் போன்ற" ஆட்டுக்கடாவை உதிக்கச்செய்தது. அது மூவுலகையும் அழிக்கும் ஆற்றல் பெற்று விளங்கியது. ஆதலால் அதன்முன் நிற்க ஆற்றாது, நாரதர் முதலான புண்யபுருஷர்கள் வேறெங்கும் புகலிடமின்றி திருக்கயிலாயமடைந்து அங்கே திருவாயில் முன் கொலுவிருந்த குமாரக் கடவுளைக்கண்டு அஞ்சலியஸ்தராய்த் தம் குறையிரந்து சரண்

புகுந்து நதித்து நின்றார். அப்பொழுது ஸ்வர்க்க மத்திய பாதாளமென்கிற மூவுலகையுமழித்துவிட்டு அந்த ஆட்டுக்கடா ஸத்தியலோகத்தை யடைந்து அதையும் அழித்துவிடத் தயாராயிருந்தது.

தஞ்சமென் றடைந்தாரை அஞ்சலென்று அபயங்கொடுத்துக்காக்கும் குகேசப்பெருமான் பக்கத்திருந்த வீரவாகுதேவரை நோக்கி அவ்வாட்டுக்கடாவை இந்தக்ஷணமே இங்கு கொணர்தியென்று கட்டளையிட்டனர். வீரவாகுதேவரும் குமரேசன் திருவருளால் அந்த அற்புத சக்திவாய்ந்த ஆட்டுக்கடாவைப் பிடித்துவரச் சென்றார். அது திரிலோகமும் பாழ்செய்துவிட்டு ஸத்தியலோகத்தை யடைந்து அதையும் அழித்துவிடவெண்ணி இறுமாந்து ஆரவாரித்து நின்றது. வீரவாகுதேவர் அதை மற்றுலகங்கள் எங்கணும் காணாது ஸத்தியலோகத்தில் வந்து தேடவும் அது அங்ஙனே ஊழிகாலத்துத் தீப்போலும் பரந்து வளர்ந்து உயர்ந்து மேருவையும் அதன் அடிக்குளம்பின் பள்ளங்களில் விழுந்த பருக்கைமணிக்கல்போல் செய்யக்கூடிய அவ்வளவு ஆகிருதிபெற்று ஆரவாரித்து நின்றதைக்கண்டார். இவரைக்காணவும் அது ஆக்ரோஷங்கொண்டு குமறிக்கிளம்பியது. "வீரவாகுதேவர் அவ்வாட்டுக்கடா அஞ்சும் வண்ணம் உரப்பி, விரைந்துபோய் அதன் கொம்புகளைப்பற்றிக் கரகரவென்று அதை யிழுத்துக்கொண்டு குகேசப்பெருமானார் முன்னம் செல்வாராயினர். அவர் திருக்கயிலாயமலையடைந்து முருகக்கடவுள் முன் அந்த ஆட்டுக்கடாவை விட்டுப்பணிந்து நின்றார்.

குமர குருபரனு மெம்பெருமானார் தம்முன் வந்து தஞ்சமென்று அஞ்சிநின்ற தேவர்கள் இருஷிகளைப்பார்த்து: "அன்புடையீர்! ஆட்டுக்கடா நம்மிடத்துக்கு வந்துவிட்டது. இனி நீவிர் ஒரு சிறிதுமஞ்சாது பூமியிற்சென்று தொடங்கிச்செய்த வேள்வியை முற்றுவிப்பீர். வேள்வியின் உண்மைப்பொருளையும் உள்ளபடி தெளிந்து கொள்வீர்!" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

அவர்களெல்லாரும் குமாரனர் திருவருளையும் அவர் பராக்கிரமத்தையும் வியந்து துதித்து ஆனந்தக்கூத்தாடி, சர்வலோக சரண்யரும், எல்லையில்லாத் திருவருட்சக்தி வாய்ந்தவருமான வேலவனை நோக்கிப்பின்னும் ஒரு வரன் வேண்டிக் கொண்டார்கள். அஃதென்னவெனில், தேவரீர் அந்த ஆட்டுக்கடாவை (பேதபாவனையை) வேறெங்கனும் விடாது வாகனமாகக்கொண்டு நடத்தியருளல் வேண்டும். அடியேங்களும் மற்றையோர்களும் அஜாரூடராகிய தேவரைக்கண்ட காலத்தே, எங்கட்குண்டாகிய இடர்களைத் தவிர்த்தாட்கொண்ட பரம்பொருளிவரென்று நல்லறிவுற்று உய்தற் கேதுவாகுமென்று குறையிரந்து நின்றனர். வேண்டியவர் வேண்டியவாறு ஈந்தருளும் ஒப்பற்ற உண்மைத் தெய்வமாம் குமரேசனும் அதற்கிசைந்தருளினர். அதுமுதல் அந்த ஆட்டுக்கடா நீங்கியற்றது எம்பெருமானார்க்கு திவ்ய வாகனமாகியது. அவரும் அஜாரூடராய் அதை வசப்படுத்தி உலகெலாம் பவனிவந்து ஐவகை நடையும் நடத்திக்காட்டினர். பக்த கோடிகள் கண்டுகளித்து உய்ந்தேம் உய்ந்தேம் என்றேற்றித் தொழுதனர். நாரதர் முதலானோர் தாம் தொடங்கிய யாகத்தை முடித்து கந்தக்கடவுள் யாகாதிபதியும், யாகபரிபாலனரும், யாகபலப் பிரதானருமென் றுணர்ந்து அவரைத் தொழுதனர். அதுமுதல் குமரேசனுக்கு "அக்னிபூ"—'அக்னி குமாரன்' என்னும் திருநாமம் விளங்கித்தது.' இதனால் அறியத்தக்கது என்னவெனில் வியஷ்டிபாவத்திலிருந் தனுபவித்து உண்மையுணர்ந்து விமுக்த வித்திபெற்றவர் சமஷ்டிபாவத்திற் பிரவேசித்து அவ்வுண்மைகளையெல்லாம் உள்ளும்புறமும் ஒக்கவுணர்ந்து உய்வழிதேடிஉய்ப அறுமுகத்தே தஹராலயத்திற்கண்டு தரிசித்த குமரதேவரைத் திருக்கயி

லயிலும் (சமஷ்டி முக்தியிலும்) கண்டு தரிசித்துத் தஞ்சமென்றடைய பேதபாவனையின் அக்கிரம அநியாயங்கள் சமஷ்டியிலும் நீங்கி சமரஸபாவம் சித்திக்குமென்பதாம். இதையே யெம் குருநாதர் "ஆட்டுக்கடா சண்டை யேதுக்கடா!" என்று சுட்டாமற் சுட்டிச் சூக்ஷ்மாதி சூக்ஷ்மமாய்ச் சூசிப்பித்தார். இந்த உண்மையையே எமர்ஸனும் ஐபந்திரிபற வுணர்ந்து ஓதியிருக்கிறார். அதை "அபய ஹஸ்தம்" என்னும் திருநாமம் சூட்டி, தேச சமஷ்டித்தலைவராய் க்ஷேத்திரபாலஸ்தானம் வகித்தவராய் தேசக்ஷேம பரிபாலகராய் விளங்கும் தேசாதிபதியும் அவர் பெருமாட்டியாரும் வியஷ்டியிற் கைகொடுத்தாதரவு செய்ததைச் சமஷ்டி பாவத்திலுமிருந்து கிரகித்து அதனுண்மை விளங்க ஆங்கிலேய மொழியில்தானே விளக்கிக்காட்டியிருக்கிறோம். அதை "அபய ஹஸ்தம்" அல்லது "பரமனோடொன்றும் பாக்கியம்" (Supreme Hand of Fellowship) * என்னும் திருநாமஞ் சூட்டிக் கீழே பிரசுரிக்கிறோம்.

——:-:——

## The Delhi-Durbar Celebration.

"The Kingdom of the World is become the Kingdom of God and His Son."—*Revelation.*

——:(o):——

### ABHAYAHASTAM
### or
### The Supreme Hand of Fellowship,
### (A Sequel to the Divine Song of Empire.)

TO THEIR EXCELLENCIES LORD AND LADY PENTLAND.

MOTTO:—"Falseness dies; injustice and oppression in the end of every thing fade and vanish away. Greed, guilty-selfishness and inhumanity are shortlived; the individual suffers but the race goes on. The larger view always and through all shams, all wickedness, discovers the Truth that will, in the end prevail, and all things, surely, inevitably and resistlessly work together for good." Amen!—*My Master's Voice (Gleanings).*

* Vide Abhayahastam or the Supreme Hand of Fellowship (A sequal to the Devine Song of Empire) by *Chennama Devi* or the Cinderella of Empire," printed below.

I

O Goddess bright, Rider of the rampant Lion
Slayer of the Animal Man on Evil bent
*Mahishasra-Mardhanee Jayam!*
I take refuge in Thee! Well-intent!

II

O Son of God, Rider of the fighting Ram & Peacock fair,
Protector Divine and Slayer of our Deva's foes,
Commander of the Divine Army fair,
I take refuge in Thee! My Life it goes!

III

O Man of pelf and power, Lord of Asura hordes,
Traitor to thy God and Thee
Warrior bold with shield and sword
Thy might is spent alas! Repent! '*Ah me*'!

IV

O Lady fair and tall, Fairy-Queen of All!
Thou hast held out to Me the Supreme hand of fellow-[ship
The Cinderella of Empire has her Fairy God-mother after-[all
Blessed be the Gardenland where the city-full her [Ruler met in friendship.

V

And thou too her loved Lord and mine
Ordained Ruler of this land
From thy towering height has stretched the mighty-hand
Sent out to save and rule this unhappy land!

VI

As thy strong hand and clear voice resounding
With a hearty '*very glad*' repeating
The proferred hand of fellowship took and held
It thrilled my heart to feel the hand that held can [weld!

VII

To Lord and Lady Pentland Fair these my thoughts I lov-[ing dedicate
They held out to Me the Supreme hand of fellowship
Chasing my heart's fears and troubles away by a hearty [hand-shake
And I, the Cinderella of Empire do HOPE to see my [troubles end in friendship.

ANANDA MISSION,
*6th December 1912.*

CHENNAMADHEVI,
(*The Cinderella of Empire.*)

——:o:——

# THE MOTHER'S LAMENT

**On Kala Bhairavashtami.***

**தனயனைக்கொடுத்த தாயிரங்கல்.**

மஹாகாலபைரவாஷ்டமி.

—:-:—

பல்லவி.

*காலபைரவரே! தக்கன்*
*தலைகொய்தவரே!*

சரணங்கள்.

1. காலையில் ஆதித்தன் உதித்தான்
காலபைரவர் அஷ்டமி திதியில்
மாலையில் தூங்கிய சேயைநான்
காலையில் மாரிலணைக்கக் காணேனே! —(காலபைரவரே!)

2. அச்வனி தேவர்கள் போலே
விச்வமெலாம்புகழ் பாலன்
வசியமா யென்கையில் வந்தவோர்குமரன்
கசியாமல் நித்ரைசெய் கோலம்பாரே! —(காலபைரவரே!)

3. உத்தமகுமாரன் பிறந்தானென் றுள்ளத்தில்
சித்தமகிழ்ந்துநா னிருக்கவே பொறுக்காமல்
உத்தமனென்பாலன் உயர்நித்ரை செய்நேர்த்தி
பித்தம்பி டித்தநான்காணக் சொடுக்கலையானேன்!
—(காலபைரவரே!)

4. ஆண்டியாவேனும் அடிமையா வேனும்
வேண்டியிருந்துய்ய நாடியிருந் தேனுன்!
தோண்டியுடைந்தது போலய்யன் கூத்து
வேண்டியி ருக்கநான் வேஷங்கலைத்தீரே! —(காலபைரவரே!)

5. என்னுள்ளம்விரிய என்மனம் குவியப்
பொன்னுட்பணிபோலப் பொட்டென்று காயத்தை
யென்னுள்மறைத்துநீ ரென்னுயிர் துடிக்கத்
தன்னுள்தானேயாகித் தேஹத்தை மறைத்தீரே!

1—12—12. —(காலபைரவரே!)

* The Anniversary Day of Saint Venkateswara Aiyah Avergal of Tiruvasalur.

## Sri Sankara—A Sketch.

### ஸ்ரீ சங்கரர்.

—:*:—

### ஏழாம் அத்தியாயம்.

1. ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ சைலத்திருக்கையில் கபாலிக மதத்தருக்குத் தலைவனான உக்கிரவைரவன் என்றவன் இவரைத்தன்னால் வெல்ல முடியாதென்றறிந்து கபடத்தால் அவரையே கொல்ல எண்ணங்கொண்டு தகுந்த வேடம்பூண்டு சங்கரர் மாணாக்கர்களுடன் கலந்து அத்வைதநூலை யோதிக்கொண்டு சமயம் பார்த்திருக்கையில், ஒருநாள் ஸ்ரீ சங்கரர் தனித்திருக்கையில் அவர்பால் சென்று துதித்து, "ஐய! நீர் முற்றும் வெறுத்தவர். யாஜிப்பவரைத் திருப்தி செய்யாதொழியீர். யான் பன்னிரண்டாண்டு மிகவருந்தி வைரவபூஜை புரிந்தேன். என் விருப்பம் பலிதமாகும் பொருட்டு ஒரு அரசனையாவது பிர்ம்மஞானியை யாவது பலியிட வேண்டும். அதற்குதக்க அரசன் அகப்படுவதில்லை. உம்மையன்றி பிர்ம்மஞானியும் வேறில்லை. ஆகையால் உமது தலையைக்கொடுக்க வேண்டும்" என்று யாசித்தான்.

2. ஸ்ரீசங்கரர் "உனது கருத்தின்படி செய்துகொள்க!" வென்று கூறி சமாதி நிஷ்டையிலிருந்தார். தனது கருத்தை முடித்துக்கொள்ள உடனே வாளையெடுத்துக் கொண்டு ஸ்ரீசங்கரர் சமீபத்தில்வந்தான். அச்சமயத்தில் பத்மபாதர் வரவும், அவர்: "ஏ! நரசிங்க!" எனலும், உக்கிர நரசிங்க மூர்த்தியுடனே தோன்றி அவ்வைரவனைக் கிழித்தெறிந்தனர். சமாதி கலைந்த சங்கரர் •உபநிஷதங்களால் அம்மூர்த்தியை சாந்தப்படுத்தினர். யாவரும் பத்மபாதரைத் துதித்துக் களித்திருந்தனர்.

3. பின்பு சங்கரர் தீர்த்தயாத்திரை செய்துகொண்டு கோகாணம் வந்து ஸ்ரீ மகாபலேஸ்வரரைத் தரிசித்து மூன்று நாள் அங்கிருந்து ஹரி சக்கர க்ஷேத்திரமடைந்து ஹரிஹரேஸ்வரரைத் தரிசித்து அருள்பெற்று மூகாம்பிகை க்ஷேத்திர மடைந்தனர்.

4. கொல்லூர் என்னும் அந்த க்ஷேத்திரத் தெருவழியாக ஸ்ரீசங்கரர் வருகையில், வயது சென்ற வேதியர் ஒருவர் தன் மனைவியுடன், இறந்துபோன தனது ஒரே குமாரனுடைய தேகத்தை வைத்துக் கொண்டு அழுவதைக் கண்ட சங்கரமணிக்குக் கருணை மேலிட்டது. தயங்கி நின்றார். உடனே, "காக்கும் வல்லமை யில்லாதவன்கருணை வீண்" என்ற அசரீரி மொழியுண்டாக, அதற்கு உத்தரமாக, "மூவுலகுங் காக்கவல்ல நின்னொருவனுக்கே அது இயலும்" என்று சங்கரர் கூற, இறந்து கிடந்த மகன் உறங்கி யெழுந்தாற் போல் பிழைத்தெழ யாவரும் கண்டு வியந்தனர்.

5. பின்பு ஸ்ரீசங்கரர் சர்வசக்தி வடிவுடைய மூகாம்பிகையைத் தரிசித்து. 'கலாரோகணம்' என்ற ஸ்துதியை செய்து வல்லிபுரம் அக்ரஹாரத்தில் தங்கியிருந்தனர். அந்த ஊரில் ஜயமுனி மதத்தை யனுஷ்டித்து வந்த இரண்டாயிரம் வேதியரும் அவர்களுக்குத்தலைவராக பிரபாகர பட்டர் என்ற குருவு மிருந்தார். இவருடைய போதனைப்படியே தென்னாட்டி லுள்ளவர்கள் நடந்து வந்தனர். இவருக்கு சுந்தரமுள்ள ஒரு குமாரனுண்டு, இவன் எட்டுவயது வரையில் ஊமையைப்போல் வாய்பேசாதிருந்தான். பிரபாகர பட்டர் அம்மகவைச் சங்கரர் பாதங்களில் பணியச்செய்து பிரார்த்தித்தனர். ஸ்ரீ சங்கரர் அம்மைந்தனைக் கருணையோடு பார்த்து, "க ஸ்தவம் சிசோது"— "நீயார்? ஏன் இவ்வாறு ஜடன்போலிருக்கின்றனை?" என்றனர்.

6. சிறுவன், "நாஹம் மநுஷ்யோ நசதேவயக்ஷ", நான் ஜடனல்லன், என்னெதிரில் ஜடமும் நடக்கின்றது" என்ற ஸத் சித்தானந்த ஸ்வரூப அத்வைத சித்தியைக் குறிக்கும் பன்னிரண்டு ஸ்லோகங்களை கர்ணாமிர்தமாய்க் கூறி

னன். ஸ்ரீசங்கரர் கருணையோடு தம் வலக் கையை அவன் தலைமேற் சாத்தி, "ஹஸ்தா மலகர்," உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஆத் மாவையறிந்தவர், என்று அழைத்து, பிரபாக ரரை நோக்கி, "இச்சிறுவர் உமக்கு உதவமாட் டார். முற்பிறப்பில் செய்த வினையால் முழு வது முணர்ந்தவரா யிருக்கின்றார். இவர் உன் வயிற்றிற் பிறந்ததால் உன் மரபினர் அனை வரும் நற்கதி பெற்றனர்" என்றுகூறி, அவரு க்கு அத்வைத உண்மையைப் போதித்து அம் மைந்தனை யழைத்துக்கொண்டு புறப்பட்டனர்.

7. பின்பு, சிவ ஸ்வரூபமாகிய ஸ்ரீசங்கரர் பிர்மா விஷ்ணு அம்சமாகிய மாணுக்கர்களால் சூழப்பெற்று வான்வழி கைலாசம் சென்று சந்திரமௌளீஸ்வர லிங்கத்தை எடுத்துக்கொ ண்டு துங்கபத்திரா நதிக்கரையில் ருஷிய சிருங்க மஹாரிஷி தவம் செய்தவிடமாகிய சிரு ங்க கிரிக்கு வந்து சில காலமிருந்து, அதைப் புண்ய பூமியென வுணர்ந்து, கலை தெய்வமாகிய சாஸ்வதியை ஸ்தாபித்துக் கோவிலொன்று கட்டு வித்து பூஜை திருவிழா நடக்கும்படி திட்டஞ் செய்தனர்.

8. தவிர, இவ்விடத்தில் ஓர் மடமமைத்து, சுரேஸ்வராசாரியரை அம்மடத்திற்கு அதி காரியாக்கி, பாரதி பீடம், சந்திரமௌளேஸ் வர லிங்கம், ரத்ன கர்ப்பவிநாயகர், சாரதா தேவி இவைகளைக்கொடுத்து ஆராதித்து பூஜி த்து வரும்படியாகவும், (பாரதி) பூரிவாள சம் பிரதாயத்தை அநுசரித்து நடவடிக்கை நட த்தி வரும்படியாகவும் திட்டஞ்செய்து, சுரேஸ் வரருக்கு சைதன்ய பிர்மசாரி யென்று பெயரி ட்டு ஆசாரியாபிஷேகம் செய்துவைத்து ஜகத் குருவாக விருக்கவென்று ஆசிர்வதித்து, இப் பீடத்தினைப் பக்தியோடு வணங்குகிறவர்களு க்கு ஞானசித்தி யுண்டாகக் கடவதென்றும், இந்தப் பீடமே மற்றெல்லா பீடங்களுக்கும் தலைமையாயிருக்க வென்று வரங்கொடுத்தனர்.

அன்று முதல் இப்பீடத்தில் சாரதாதேவி பரி பூர்ணமாய் வீற்றிருந்து பாரத மாதாவாய் விள ங்கி அடுத்தவரை யாதரித்து வருகின்றார்.

9. அன்றியும் ஸ்ரீ சங்கரரிடத்தில், வேதா ந்த நூல்களில் அக்கரையில்லாமல் யார் என்ன கூறினும் மறுமொழியின்றி குருசேவையே கண்ணும் கருத்துமாய்ச் செய்துகொண்டு வந்த ஓர் மாணுக்கர் இருந்தனர். இவருக்கு 'ஆநந்தகிரி' என்று பெயரிட்டு அழைத்து வந் தனர் ஆசிரியர். ஒரு நாள் இவர் ஆசிரியர் காஷாயத்தை சுத்தஞ்செய்துவர நதிக்குப் போயிருந்தனர். மற்ற மாணுக்கர் பாடத்தை வேண்டி நிற்கையில் ஆநந்தகிரி வரட்டுமென்று குரு கட்டளை யிட்டதைக்கண்ட மற்ற சிலர் எழுந்து வணங்கி, ஐயா! அவர் எப்பொழுதும் ஏதாவதொன்றைச் செய்துக்கொண்டே யிருக் கின்றார். அவர் வராதது எங்கள் பாடத்திற்குத் தடையோ? என்றனர்.

10. உடனே, ஸ்ரீசங்கரர் எல்லாக்கலை களையும் ஆநந்தகிரிக்குத் தமது மனத்துள் தான ஞ்செய்து விட்டு, பாடம் கூறிக்கொண்டிருந்த னர். சற்று நேரத்திற்குள் ஆநந்தகிரி, சுத்தம் செய்த காஷாய வஸ்திரங்களுடன் குரு சந்நி தானத்தை யடைந்து, 'தோடகம்' என்னும் விருத்தங்களால் குருவை ஸ்துதி செய்தனர். அதைக்கண்ட மற்ற மாணுக்கர் குருபக்தியின் பெருமையையும் அவர் சேவையின் மகிமை யையுமுணர்ந்து பணிந்து நடந்தனர். இந்த ஆநந்தகிரிக்கு அன்றுமுதல் தோடகாசாரி யார் என்று பெயர் வழங்கப்பெற்றது. ஸ்ரீ சங் கராசாரியார் மாணுக்கருள் சுரேஸ்வரர், பத்ம பாதர், ஹஸ்தாமலகர், தோடகர் என்ற நால் வரும், பிரமனது நான்கு முகம்போலும், வே தம்போலும், புருஷார்த்தங்கள் போலும் ஆசி ரியர் கருத்தை யறிந்து தொண்டு செய்து வந் தனர்.

11. பின்னர், ஸ்ரீ சங்கரர் தமது மாணாக்கர்களையெல்லாம் அழைத்து அத்வைத சித்தாந்தங்களைப்பற்றிய நூல்களைச் செய்யுங்களென்று ஆக்ஞாபித்தனர். ஒவ்வொருவரும் தம் தமக்குள்ள சக்திக்குத் தக்கபடி பல நூல்களைச் செய்து குரு தக்ஷிணையாகக் கொடுத்தனர். அவைகளை அன்போடு பெற்றுக்கொண்டு வாழ்த்தினர்.

12. அதன்மேல் ஸ்ரீசங்கராசாரியார் ஞான திருஷ்டியினால் தனது அன்னையின் முடிவுகாலத்தை யறிந்து ஆகாய மார்க்கமாய் காலடி சேர்ந்து தாயெதிரில் நின்றனர். தாய் மகனைக்கண்டு ஆனந்தங்கொண்டு, சங்கரா! வந்தனையோ! இனி யான் பெறத்தக்க தொன்றுமில்லை. நீயே என் அந்திக்கடனை முடித்து நற்கதி யடைவிக்க வேண்டு மென்றனர்.

13. ஸ்ரீ சங்கரர் தனது தாயாருக்கு அத்வைத உண்மையையும் நிர்குண உபாசனை மார்க்கத்தையும் கூற, அவர், “மகனே! நிர்குண உபாசனையில் என் மனம் நிலைக்கவில்லை. சகுண உபாசனையில் சிறந்ததொன்றை என் சமயத்திற்கு தக்கவாறு கூறுக” என்று வினவ, சங்கரர் “சிவ புஜங்கப்பிரஸாத ஸ்தோத்திரம்” என்ற ஸ்துதியை செய்தனர். உடனே தாயார் கண்களுக்கு சூலபாணிகளாகிய சிவ கணங்கள் தோன்றினர்.

14. தாயார், மைந்தா! நான் இவர்களோடு செல்ல மாட்டேன் என்றனர். சங்கரர், இவருக்கு இக்கதியும் கிடையாதென வுணர்ந்து சிந்தித்து விஷ்ணுவை ஞாபகப்படுத்தி ‘விஷ்ணு புஜங்கம்’ என்ற ஸ்துதியைச் செய்தனர். அப்போது அந்த அம்மை, “கிருஷ்ணா! வாசுதேவா! முகுந்தா! கோவிந்தா!” என்ற நாமங்களைக் கூறிக்கொண்டு தேகத்தை விடுத்தனர். விஷ்ணு தூதர்கள் அவ்வம்மையை வைகுண்டத்தை அடைவித்தனர்.

15. ஸ்ரீ சங்கரர் தனது தாயின் உடம்பை ஸம்ஸ்காரம் செய்யும் பொருட்டு கிராமத்திலுள்ளவர்களையும் தனது பந்துக்களையும் அக்நியும் எரிகரும்பு முதவும்படி யாசித்தனர். ஒவ்வொருவரும் பலவித வாதங்களைக்கூறி உதவாமற் போயினர்.

16. ஸ்ரீசங்கரர் அவர்களைப் பார்த்து “உங்களுக்கு சந்நியாசிகளுக்குதவும் யோக்கியதையில்லாமற் போகக்கடவது; வேதக் கருத்துகள் உங்களுக்கு எட்டாமற் போகட்டும்; உங்கள் மனையே மயானமாகட்டும்” என்றுகூறி புழக்கடையிலிருந்த வாழை மரங்களையும் பனையையும் விறகாக அடுக்கி தாயின் உடலை தானே தூக்கி வைத்து, வலக்கரத்தில் அக்நியை யுண்டுபண்ணி, தகன கருமத்தை முடித்து, கமண்டல ஜலத்தை மந்திரித்து, கங்காதேவியைப் பிரார்த்தித்து, ‘அஸ்திஹாரணி’ என்னும் தீர்த்தத்தை யுண்டுபண்ணி அஸ்தியையிட்டுக் கடனை முடித்து, “இந்நாடு சந்நியாசிகள் சஞ்சாரத்திற்கு இசைவற்றதாகுக” என்று கூறி ஆகாய மார்க்கமாய்ப் போயினர்.

17. அப்பால் பத்மபாதர் தீர்த்தயாத்திரை போய்வர உத்தரவு கேட்க, சங்கரர் அவருக்கு யாத்திரையின் குண தோஷங்கள், யாத்திரா விதி, யாத்திரையின் இரகஸ்யம் முதலியவைகளைக் கூறி விடை கொடுத்தனர்.

18. பத்மபாதர் வட தேசங்களை முந்தியே பார்த்தவரான படியால் தென் தேசங்களை நோக்கிப் புறப்பட்டு காஞ்சி, காளஹஸ்தி, திருப்பதி முதலியவைகளை தரிசித்துக் கொண்டு ஸ்ரீரங்கம் வந்து தனது அம்மான் மனைக்கு பிக்ஷைக்காகச் சென்று, அவர் வீரவைஷ்ணவராயும், பூர்வமீமாம்ஸையில் அபிமான முள்ளவராயும், சகல கலையிலும் வல்லவராயுமிருந்தபடியால் தாம் செய்த பாஷியத்தைக் காட்டினர். அவர் அவற்றின் குணங்களுக்கு ஆனந்தமடைந்தாராயினும், தமது மதத்திற்கு மறுப்

பாயிருப்பது பற்றி உண்டான வியாகூலத்தை வெளிக்காட்டாமல் பாஷ்யத்தைப் புகழ்ந்தபடியால், பத்மபாதர் அவர் வசத்தில் தனது நூல்களை வைத்துவிட்டு இராமேஸ்வர யாத்திரைக்கு சென்றார்.

19. அம்மான், மதத்துவேஷத்தால் தமது வீட்டிலிருந்த பொருள்களை அப்புறப்படுத்திவிட்டு தன் மனைக்குத் தானே நெருப்பிட்டு, "என் பொருள் போனாலும் போகட்டும், ஐயோ! சந்நியாசியின் ஏடுகள் போயிற்றே" என்று அங்கலாய்த்து கொண்டிருந்தார்.

20. பத்மபாதர் கும்பகோணம், மாயூரம், மத்தியார்ச்சுனம், மதுரை முதலிய ஸ்தலங்களை தரிசித்து அத்வைதப் பிரசங்கம் செய்துக் கொண்டும், இதர மதவாதிகளைத் தோல்வி செய்து கொண்டும், தர்ப்ப சயனத்தைச் சேர்ந்து அகஸ்தியரை தரிசித்து அவரால் பல ரகஸ்யங்களையும் இராமலிங்க மகத்வத்தையு மறிந்து, ஆசீர்வாதம் பெற்று சேதுஸ்நானம் செய்து இராமலிங்கத்தை தரிசித்து, ஸ்ரீரங்கம் வந்து தனது நூல்கள் தீப்பட்டெரிந்து போனதற்கு வருத்தப்பட்டு மறுபடியும் பாஷ்ய மெழுதத் தொடங்கினார்.

21. இவருடைய வல்லமையைக் கெடுக்க வெண்ணங்கொண்டு அம்மான் மருந்திடவே, அதனால் அறிவு குன்றி நூல் எழுத சக்தியற்றவராய் ஸ்ரீசங்கரர் சந்நிதியை யடைந்தார்.

22. குருதரிசனத்தால் அறிவு மயக்க மொழிந்து பிரகாசம் பெற்று இஷ்டசித்திகளைப் பெற்றவராய் விளங்கினார்.

23. இச்சமயத்தில் இராஜசேகரன் என்ற கேரளநாட்டரசன் தனது 'சரஸ்வதிமால்' என்ற புஸ்தகசாலையும், தானாக வியற்றியநூல்களும் தீப்பட்டு எறிந்து போனதால் கவலையுற்றவராய் ஸ்ரீ சங்கராசாரியரை. யடைந்து வணங்கினான். ஸ்ரீ சங்கரர் அவனது நூல்களையெல்லாம் வாய்ப்பாடமாகக் கூறி சில தத்வ ரகஸ்யங்களையும் உபதேசித்து அனுப்பினார்.

T. C. வேங்கடரமணய்யர்.

———:o:———

SHORT STORY.

## KING JAYASEN.

### ஜயசேன ராஜன் கதை.

———:(*):———

(281-வது பக்கத் தொடர்ச்சி.)

ஜயசேனன் மாலுமிகள் கட்டாயத்தின் பேரில் பானுமதியின் உடலை ஒரு பெட்டியில் அடக்கம் செய்து அதை சமுத்திரத்தில் எறிந்து விட்டானென்று சென்ற சஞ்சிகையில் சொன்னோ மல்லவா? இது இப்படி முடிந்ததும் சமுத்திரத்தில் புசல் கொஞ்சம் குறைய ஆரம்பித்தது. உடனே ஜயசேனன் மாலுமிகளைப்பார்த்து, கப்பலைக் கூர்ஜர தேசத்துக்குக் கொண்டுபோகும்படிக்கும், தனது இளங் குழந்தை காந்தாரதேசம் போகுமளவும் பிழைத்திருக்குமோ. மாட்டாதோ வென்று தன் மனதில் சந்தேகமுண்டானதால் அதைக் கூர்ஜர தேசத்தில் விட்டுவிட வேண்டுமென்றும் சொன்னான். அவர்களும் அப்படியே கப்பலை அத்தேசத்தை நோக்கி. நடத்தினார்கள்.

இவ்விதமாகப் பானுமதி யானவள் பெட்டியுடன் சமுத்திரத்தில் தள்ளப்பட்ட காலம் இராக்காலமாயிருந்தது. அந்தப் பெட்டி விழுந்தவிடம் புபபுஷ்ரி என்னும் நகரத்துக்குச் சமீபமாயிருந்தது. அந்த ஊரில் "மாயோகி" என்றொரு பிரசித்த வைத்தியர் இருந்தார். அவர் மறுநாட் காலையில் சமுத்திரக் கரையில் உலாவப் போனபொழுது அங்கு ஒருநாளுங்காணாத பெட்டியொன்று ஒதுங்கி யிருப்பதைக் கண்டு தன் வேலைக்காரர்களைக் கொண்டு அதை வீட்டிற் கெடுத்துப்போய் உடைத்துப பார்த்தார். அதில் பைங்கிளிபோன்ற பெண்ணொருத்தியை வாடா முகத்துடன் தூங்கவைத்திருப்பதைக் கண்டு அவளைக் சுற்றிப்போட்டிருக்கும் அத்தர், புனுகு முதலான வாசனைத் திரவியங்களையும் பார்த்து ஒவ்வொன்றா யெடுத்துப் பரிசோதித்தார். அவைகளுடன் ஒரு காகிதம் இருக்கக்கண்டு அதனால் பெட்டியிலிருந்த பெண் இன்னாளென்றும் இன்னகாரணத்துக்காக அப்படி வைக்கப்பட்டாளென்றும் அறிந்து கொண்டார். மாயோகி யென்பவர் வைத்தியத்தில் மிகத் தேர்ச்சிபெற்றவராதலால் சவம்போலப் படுத்திருக்கும் பானுமதியின் முகம்வாடாமலிருப்ப

தைக் கண்டு "ஓகோ! ஜயசேனன் மோசம்போய் இவளை மரித்துவிட்டதா யெண்ணிச் சமுத்திரத்தில் எறிந்து விட்டதாகத் தோன்றுகிறது; இவள் மயக்கத்தை மரணமாக எண்ணிவிட்டார்களே சண்டாளர்கள்! தெய்வாதீனமாய் இந்தப்பேழை இங்கே அகப்பட்டதென்று சொல்லிக்கொண்டே அவளை மறுபடி பிழைப்பூட்டத் தான் எத்தனப்பட்டார். கண் விழித்துக்கொண்டதும் பானுமதி பிரமிக்காம லிருக்கவும், கொஞ்சம் கொஞ்சமாகச் சுகமாய்க் கண் விழிக்கும் படிக்கும் நல்ல வீணை சுரபத் முதலிய வாத்தியங்களைத் தன் வீட்டில் வாசிக்கும்படி திட்டம் செய்து தான் வைத்தியம் செய்ய ஆரம்பித்தார். சிறிது சிறிதாய் மருந்து ஏற ஏற, வீணைகானம் ஆனந்தமாய் நடந்துகொண் டிருக்கையிலேயே பானுமதி கைகால்களை யாட்டிக்கொண்டு எழுந்திருந்தாள். அப்பொழுது மாயோகி முதலானவர்களுக் குண்டான ஆனந்தத்தைக் சொல்லவேண்டுமோ? பானுமதி கண்விழித்ததும் நான் இப்பொழுது எங்கிருக்கிறேன், என் நாயகன் எங்கேயென்று வினவ, அருகாமையிலிருந்த வைத்தியர், கொஞ்சம் கொஞ்சமாய், நடந்தவரலாற்றை யெல்லாம் சொல்லி நகைகளையும் ஜயசேனன் காகிதத்தையும் காண்பித்தார். அவைகளைப் பார்த்ததும் "ஆம், இது என் புருஷன் கையெழுத்துத்தான்" என்று பானுமதி நிச்சயப்படுத்திக்கொண்டு, தனக்குவந்த கஷ்டத்தைத்தான் அறிந்தவளாய், இனிநாம் இப்படி பூமியிலிருப்பதில் பிரயோசன மில்லையென்று தீர்மானித்து, காவித்துணி கட்டிக்கொண்டு அந்தவூர் தேவாலயத்தில் தவசிப் பெண்போலத் தன் வாழ்நாட்களைக் கழிக்க நினைத்தாள். இவளை மறுபடி பிழைக்கச்செய்த மாயோகி யென்பவரின் சகோதரியும் அத்தவூர் தேவாலயத்தில் தபசிப் பெண்ணா யிருந்தபடியால், அவளுடன் சேர்ந்து இவளையும் அங்கிருக்கும்படி அந்த வைத்தியர் இவளுக்கு உடம்பு அனுகூலமானவுடன் அனுப்பிவிட்டார். அவ்விடத்தில் அவள் நியமம், நிஷ்டை முதலியவைகளால் தன் தேகத்தை வற்றச் செய்து கொண்டு ஈசன் திருவடிகளை யெப்பொழுதும் உள்ளத்தில் வைத்தவளாய்த் தன் காலத்தைக் கழித்து வந்தாள்.

இவளைச் சமுத்திரத்தில் பேழையுடன் எறிந்துவிட்டுக் கப்பலை யோட்டிக்கொண்டுபோன ஜயசேனன், பிறகு என்னசெய்தான் என்பதைச் சற்று விசாரிப்போம். அவன், ஸமுத்திரத்தில் பிறந்தவளுகையால், தன் பெண்ணுக்கு ஸாகரிகை (ஸமுத்திரத்தில் உதித்தவள்) என்று பேரிட்டு எடுத்துக்கொண்டு கூர்ஜா தேசத்தைஅடைந்தான். முன்னே அந்த நாட்டிலுண்டான பஞ்சத்தை ஜயசேனன் தீர்த்தவனுதலால் அவன் வந்ததைக் கண்டவுடனே அவ்விடத்திலிருந்தவர்க ளெல்லாரும் மிக்க சந்தோஷமடைந்தார்கள், பின்பு அவனுக்கு நேரிட்ட துன்பத்தைக்கேட்கவே, சிறுபிள்ளைகள் தொடங்கி யெல்லோரும் அது தமக்குவந்த துன்பம்போலவே கண்ணீர் வடித்தார்கள். அந்த தேசத்தரசனுகிய குணசிலனிடத்திலும் மிருதுபாஷிணியினிடத்திலும் தன் பச்சைக்குழந்தயாகிய ஸாகரிகையை ஜயசேனன் ஒப்புவித்து, அதைச் சாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளும்படி அவர்களைவேண்ட, அதற்கு அந்த அம்மாள் தன் குழந்தையைவிட இந்தக் குழந்தையை மேலாகப் பாவித்துக் கொள்வதாக உறுதிமொழி கூறினள். அன்றியும் ஜனங்கள் எல்லாரும் பஞ்சத்தால் வருந்தும்பொழுது மிகுந்த தானியங்களைக் கொண்டுவந்து அவன் தங்கள் குடிகளை இரக்ஷித்தது தன்மனதில் இருக்கிறதென்றும், அதற்கு விரோதமாய்த் தானேதாவது செய்யும் பக்ஷத்தில் தெய்வம் தன்னைக்கெடுத்துவிடு மென்றும் ஜயசேனனுக்குத் தேறுதல் சொல்லியனுப்பினள். இப்படி அவன் சொன்ன வாய்மொழிகளை யெல்லாம் கேட்டு ஜயசேனன் சந்தோஷமாய்த் தன்குழந்தையை அங்கேயே விட்டுவிட்டுத் தன் நாட்டுக்குச் சென்றான்.

நடுவழியில் சிறிதும் அபாயமில்லாமல் சுகமாய் காந்தாரதேசம் போய்ச்சேர்ந்து அங்கு அவன் பட்டாபிஷேகம் செய்துகொண்டு தேசத்தை ஆண்டுவந்தான். இறந்துபோய் விட்டதாக அவன் எண்ணிக்கிடந்த அவன் மனையாளோ புஷ்பபுரி யென்னுமூரில் காவித்துணியைக் கட்டிக்கொண்டு வாழ்ந்திருந்தாள். இவர்களுடைய குழந்தையான ஸகரிகையானவள் குணசில ராஜன் ஸம்ரக்ஷணையில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து மிக்க புத்திசாலியாய்க் கல்வி கற்றுவந்தாள்.

ஸாகரிகையின் புத்தி யாவரும் வியக்கத்தக்கதாயிருந்தது. உபாத்தியாயர் சொல்லிக்கொடுக்கிறதை மிகத் துடியாய்க் கற்றுக் கொண்டாள். எல்லாக் கலைகளும் அவளுக்குப் பதினைந்து வயதுக்கு முந்தியே வந்துவிட்டன. அவள் சங்கீதத்தில் கந்தர்வப்

பெண்போலும், நாட்டியத்தில் அப்ஸரஸ்ஸுகள் போலும் தேர்ச்சியடைந்தாள். தையல் வேலையிலோ அவள் அதிக கெட்டிக்காரி. பூ, கொடி, பறவை, மிருகம், மனிதர் முதலிய எல்லாவற்றையும் அந்தந்த மாதிரியாகவே நூலாலே விசித்திரமாய்ப் பூப்போடுவாள். இவள் இவ்வளவு கெட்டிக்காரியாய் இருந்தது கண்டு அந்த ஊரில் எல்லோரும் சந்தோஷித்தார்கள். ஆனால் இவள் படிப்பைப்பற்றி ஆனந்தப்படாமல் மன வருத்தப்பட்டவள் ஒருத்தியே. அவள் யாரெனில், மிருதுபாஷிணி யென்பவள். அவள் ஜயசேனனிடம் ஸாகரிகையை மிகவும் கருத்தாய்ப் பாதுகாக்க ஒப்புக்கொண்டவள் தான்; அப்படியே கொஞ்சகாலம் செய்துகொண்டு வந்தாள்: ஆனால் அவளுக்கு ஒரு பெண் உண்டு. அந்தப்பெண்ணும் ஸாகரிகையுடன் படித்து வந்தாள். என்றாலும் இவள் அதிக மந்த புத்தியாயிருந்தபடியால் ஸாகரிகையைப்போல பெயர் எடுக்கவில்லை. தன் பெண் ஒவ்வொரு விஷயத்திலும் தாழ்ந்து ஸாகரிகை உயர்ந்துவிடவே மிருதுபாஷிணிக்கு இவள் பேரில் அதிக அசூயை உண்டாகி விட்டது. ஜனங்களெல்லாம் ஸாகரிகையைப் புகழவும் தன் பெண்ணை இகழவும் ஆரம்பிக்கவே ஸாகரிகையை எப்படியாவது இந்தப் பூமியிலிருந்தொழித்துவிட வேண்டுமென்ற எண்ணம் அவளுக்குண்டாயிற்று. இப்படிச் செய்தாலொழியத் தன் பெண்ணின் பெயர் முன்னுக்குவர மாட்டாதென்று தோன்றவே, அதை நிறைவேற்றத் தீரவீரன் என்ற தன் மனிதன் ஒருவனுடன் தீர்மானித்துக்கொண்டு அவனுக்குப் பல வெகுமதிகள் செய்வதாக ஆசை காட்டினாள். தெய்வம்கூட அவள் பங்கிலிருந்து சகாயம் செய்வதுபோலாயிற்று. ஸாகரிகையுடன் வந்த தாதியாகிய சுமுகி என்பவளும் மாண்டாள். இப்படித் தன்னுடன் தான் பிறந்த காலம் முதலிருந்த தாதிபோனதற்காக ஸாகரிகை பட்ட துக்கம் கொஞ்ச நஞ்சமல்ல; பிரதி தினமும் காலையிலெழுந்திருந்து புஷ்பங்களை யெடுத்துக் கொண்டுபோய் தாதியின் சமாதியில் சேர்த்துப் பாடித்தொழுது விட்டு, தனக்குப் பிறந்தது முதல் துக்கத்தின் மேல் துக்கமாய் வருவதை நினைத்துத் தன் தாய் மாண்டதையும், தகப்பனார் திரும்பிப் பாராமலிருப்பதையுக், தன் தாதி போனதையும் எண்ணிப் புலம்புவாள். இப்படி ஒருநாள் புலம்பிக் கொண்டிருக்கும் பொழுது தீரவீரன் என்பவனோடு மிருதுபாஷிணி யென்னும் கொடியவள் அங்கு வந்து, ஏன் நீயிங்கு தனியாய்ப் புலம்புகிறாய்? இவன் கூடத்துணையாயிருப்பான்; சமுத்திரக்கரை முதலான நிர்மலமான இடங்களில் சந்தோஷமாய் உலாவு. உன் தகப்பனார் சீக்கிரம் வரப்போகிறதாகக் கேள்வி. உன் உடம்பு இப்படி இளைத்துப் போயிருப்பதைக் கண்டால் வருத்தப்படுவார். துக்கத்தை எப்பொழுதும் நீ பாராட்டினால் இப்படித்தான் உலர்ந்து போவாய். அவள்போய் விட்டாள்; இனி நீ புலம்பியென்ன பிரயோசனம் என்று சொல்லி, அவளைக் கொலைசெய்யத் திட்டம்பண்ணி யழைத்து வந்த தீரவீரனை யங்குவிட்டு விட்டு மிருதுபாஷிணி தன் வீடு சேர்ந்தாள். போகும்பொழுது நான் சொன்னது ஞாபகமிருக்கட்டும் என்று அவனைப் பார்த்துச் சொல்லிப்போனாள். அது ஸாகரிகையின் மனதில் கொஞ்சம் அச்சத்தை யுண்டாக்கிற்று.

கொலைபாதகனான தீரவீரன் ஸாகரிகையை ஸமுத்திரத்தண்டை யழைத்துக் கொண்டுபோனான். தான் முதலில் பிறந்த விடமான சமுத்திரத்தின் அழகைக்கண்டு ஸாகரிகை பூரித்து, தனது தாதி சுமுகி தன்னிடம் சொல்லியிருந்தவைகளெல்லாம் ஞாபகத்துக்கு வந்தபடியால், கூட வந்த மனிதனைப் பார்த்து தன் தகப்பனார் தாயாரைப் பெட்டியில் வைத்துப்பூட்டி சமுத்திரத்தில் போட்டது முதலான எல்லாச் சங்கதிகளையும் பற்றிச்சொன்னாள். கொல்ல ஒப்புக்கொண்டுவந்த மனிதன் அவளை நோக்கி, நீ சொன்னதுபோதும், சீக்கிரமாய் நீ பிரார்த்தித்துக்கொள்ள வேண்டிய மந்திரங்களைச் சொல்லிப் பிரார்த்தித்துக்கொள்; நான் உன்னைக்கொன்று விட வேண்டும்; இது மிருதுபாஷிணியின் உத்தரவு என்றுகூற, ஸாகரிகை நடுநடுங்கி, "ஆஹா, சாக வேண்டுமோ நான்! யாதுகாரணமோ தெரியவில்லையே. நான் ஒருநாளும் அவளைப்பார்த்து ஒரு பொல்லாத பேச்சுக்கூடப் பேசினதில்லையே. நான் ஈ எறும்புகளுக்குக்கூட உபத்திரவம் செய்யாமல் நடந்து கொண்டு வருகிறேன்; நான் என்னை யறியாமல் ஒரு பூவை மிதித்து விட்டாலுங்கூட, ஐயோ, இப்படிச் செய்துவிட்டேனே யென்று துக்கப்படுகிறவளாயிற்றே" என்று வருத்தப் படுகையில், கொலைக்கஞ்சாத தீரவீரன் என்பவன், "அதெல்லாம் எனக்கொன்றும் தெரியாது; உன்னைக்கொன்று விட எனக்குத்தரவேயல்லாமல் காரணம் சொல்ல உத்தரவல்லவென்று சொல்லிக் கத்தியை உருவினான். கத்தி

யைக்கண்டு நடுங்கி ஸாகரிகை மூர்ச்சையடைந்தாள். அந்தக்ஷணம் அவ்விடம் சமுத்திரத்தினின்று வந்திறங்கின கடற்கொள்ளைக்காரர்கள் வேகமாய் அங்கு வந்து ஸாகரிகையென்னும் பெண் மாணிக்கத்தைச் சிறைப்பிடித்துக் கப்பலிலேற்றிக்கொண்டு போய் விட்டார்கள். இம்மாதிரி தெய்வச் செயலாய் ஸாகரிகை தீரவீரனால் கொல்லப்பட்டாமல் பிழைத்தாள். தீர வீரன் தனது யஜமானியாகிய மிருதுபாஷிணி கோபித்துக் கொள்ளாதிருக்கும் பொருட்டு ஒரு நாயைக்கொன்று அதன் ரத்தத்தைக்காட்டி ஸாகரிகையைக்கொன்று விட்டதாகத் தெரிவித்தான். அந்தக்கொடிய மிருதுபாஷிணியும் ஸாகரிகை உடம்பு அஸெக்கியமாயிருந்து மாண்டுபோனதாகச் சனங்களுக்குத் தெரிவித்துப் பொய்ச் சமாதியொன்றைக் கட்டி, அதில் ஸாகரிகை யென்பவள் இறந்து விட்டதாகச் சிலா சாஸனங்களையும் பதிப்பித்தாள்.

(இன்னும் வரும்)

———:o:———

## Historical Selections.

### The Romance of a Vanquished King.

### சரித்திர விலாஸம்.

———:※:———

ஜபிக்கப்பட்டு ராஜ்யத்தை விட்டோடின ஒரு மொகலாய ராஜன் கதை.

(148-ம் பக்கத் தொடர்ச்சி)

சென்ற சஞ்சிகையில் மோகனம் ஜோஸியக்கார கிழவியினிடம் கூலியாக ஒரு மோகரா கிழவியின் மடியில் போட்டாளென்று சொன்னோமல்லவா. மோகனம் அவ்வளவு தாராளமாய் மோகரா கொடுப்பதைப்பார்த்து அந்தக் கிழவி, பெண்ணே! உன்னைப்போல தாராளமான ளை ஒருவர்க்கும் இல்லை. உன் இஷ்டமெல்லாம் சீக்கிரமே கைகூடும் துரிதத்திலேயே உனக்கு நல்ல மதிப்பும் க்ஷேமமும் உண்டாகப் போகிறது; என்னோடு கூடவே வா என்று சொல்லித் தான் முன்னே சென்றாள். மோகனமும் அவளை பின் தொடர்ந்துபோனாள். அவள் வசிக்கிற குகையின் வாயில் ஒருவர்கூட தாராளமாய் நுழைந்து போகக் கூடாததாயிருந்தது.

அதற்குள் நுழைந்த வுடனே ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியவில்லை. அந்தப்பேரிருளைப் பார்த்து மோகனம் மிகவும் பயந்து அப்புறம் உள்ளே ஒத்திப்போக அஞ்சி, என்ன சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டோமென்று அங்கேயே திகைத்து நின்றாள். சிறிது நேரம் கழித்து அந்தக் கிழவி உள்ளேபோய் வந்து மோகனத்தைப் பார்த்து குழந்தாய் எதைப்பற்றி நீ இப்பொழுது கேட்கிறாயென, அந்தப் பெண் அம்மா நான் ஒரு பள்ளச்சி, பள்ளன் பணக்காரனானதற்குச் சாரணங்கூட நான் சொல்லவேண்டுமோ? இவ்வுலகம் முழுமையும் பொதுவாய்ப் பார்க்கிற கடவுள் கண்ணுக்கு எல்லாம் ஒன்று தானே. என் எண்ணமெல்லாம் தங்களுக்குத்தானே தெரியாதா? நான் வாயைவிட்டுச் சொல்ல வேண்டுமோ என்றாள்.

அதைக்கேட்ட வள்ளுவச்சி உன் இஷ்டப்படியே உனக்குக் கலியாணம் நடக்கும். சுயஜாதி புருஷனைக் கலியாணஞ் செய்து கொள்ளலாம். ஒரு வேளை அப்படி நடவாமற்போனாலும் போம். எப்படியாவது உனக்குக் கலியாணமாவதற்குச் சந்தேகமில்லை யென, மோகனம் ஒரு பள்ளனைக் கலியாணஞ்செய்து கொள்ளுவதைவிட எனக்கு உயிரை விடுவதே நல்லது என்று சொன்னதற்கு அவள், அப்படி ஒருபொழுதும் நடவாது; உனக்கு கலியாணமாவது நிச்சயம். நீ பெண்ணும் பிள்ளையுமாக வெகுசெல்வமாய் வாழ்வாய். இன்னும் விசேஷமாய்த்தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் உன் முகக்குறிகளையும் நக்ஷத்திர பலன்களையும் நன்றாய்ப் பார்த்து தெரிந்து கொள்ளவேண்டும். நாளை இந்நேரத்திற்கு வந்தால் நன்றாய்ப் பார்த்துச் சொல்லுகிறேன். சகுனங்கள் நன்றாய் ஆகிறது. போய்வா! என்று சொல்லி இவளை இந்த குகையைத்தாண்டி வெளியே கொண்டுவிடு என்று தன் நாயை ஏவினாள். உடனே அந்த நாய் வெளியே ஓடி குகைவாயிலண்டை

நின்று குரைத்தது. அதைக்கேட்டு ஜோஷியக்காரி அதோ நாய் அழைக்கிறது; நாளைய தினம் வந்தால் இன்னும் எவ்வளவோ நல்ல சங்கதிகளெல்லாம் கேட்கலாம். வருங்கால முழுமையும் ஒரே நிமிஷத்தில் கண்டறிவது மிகவும் கடினமல்லவா? நாளைய தினம் வரும் பொழுது மோகராவை மட்டும் மறவாதே. கூலியில்லாமல் எந்தக் காரியம்தான் ஆகும்! என்றாள்.

பேராசை கொண்டு அவள் சொன்ன சொல்லைக் கேட்டு மோகனத்திற்கு கொஞ்சம் அவளிடத்தில் வெறுப்புண்டாயிற்று. ஆயினும் தன்விதி எப்படிப்பட்டதோ தெரிந்து கொள்ள வேண்டுமென்கிற ஆவல் அதிகமாயிருந்ததனால் எவ்வளவு சரியானாலும் சரி அதை அவசியம் தெரிந்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டே வீட்டிற்குப்போனாள். அவள் போய்வந்தசெய்தியைக் கேள்விப்பட்டு வீட்டில் தாய் தந்தையர்களும் சந்தோஷப் பட்டார்கள்.

வீட்டிற்குப் போயும் மறுநாள் எப்பொழுது அந்த வேளை வரப்போகிறதென்று மோகனம் அதே ஞாபகமாய் காத்துக் கொண்டிருந்தாள். அந்நேரமானதும் மறுபடி மோகனம் அவளிடம் போய்ச்சேர, ஜோஷியக் கிழவி மோகனத்தைப் பார்த்தவுடனே கையை நீட்டினாள். மோகனம் ஒரு மோகரா கொடுத்தாள். அதைக் கண்டு அந்த முகங்கறுத்து நீட்டின கை நீட்டினபடியே இருந்தாள். மோகனம் மற்றொரு மோகராவும் கொடுத்தாள். உடனே அவள் தன் பேராசை அடங்கினவள் போலக் கையை மூடிக்கொண்டு எழுந்து, 'உள்ளேவா குழந்தாய்' என்று சொல்லி அவளை அழைத்துக் கொண்டு உள்ளே போனாள். மோகனமும் முதனாள் போலவே அந்தப் பேரிருளான குகைக்குள்ளே போய் ஒன்றும் தெரியாமல் நின்றாள். சிறிது நேரம் கழித்துவந்து அந்தக் கிழவி "இன்றைய தினமும் உன் பாக்கியத்தை நன்றாய்ச் சொல்லக்கூட வில்லை; நாளைவா!" என்று சொல்ல மோகனத்திற்கு மிகவும் விசனமுண்டாயிற்று; மோகராவை மறவாதே யென்கிற வார்த்தையையும் கேட்கவே அவள் ஒன்றும் பதிலுரைக்க நாவெழாமல் சரேலென்று புறப்பட்டு வீட்டுக்குப்போய் விட்டாள். தன் அதிர்ஷ்டத்தை அறிய வேண்டுமென்று அவள் கொண்டிருந்த பேராவலுக்கு இந்த வெறுப்பு எவ்வளவு! மறுநாளும் அப்படியே மோகனம் அவளிடத்துக்குச் சென்றாள்.

பலநாள்வரையில் இப்படியே நடந்து வந்தது. ஒவ்வொரு தடவையிலும் கூலிமட்டும் குறையவில்லை. இப்படி வெகுநாளாகவே, அந்தக் கிழவி மோகனத்தின் பொறுமையைப் பார்த்துப் பரிதாபப்பட்டாளோ என்னவோ, ஒருநாள் நாளை இரட்டிப்புக்கூலி கொண்டு வந்தால் உன் அதிர்ஷ்டத்தைத் தெரிந்துகொண்டு போகலாமென்று உறுதியாய்ச் சொன்னாள். பொறுத்ததெல்லாம் பொறுத்தோம்; இன்றைய தினமும் பொறப்போமென்று அவள் அப்படியே மறுநாளும் போனாள். அவளைப் பார்த்த வுடனே ஜோசியக்கிழவியும் புன்னகையோடு கூலியை வாங்கிக்கொண்டு, பையிலிருந்து ஒரு பாம்பை யெடுத்துத் தட்டிப் படமெடுத்து ஆடச்செய்து மோகனத்தை யுள்ளே யழைத்துக் கொண்டுபோனாள். மோகனம் அந்தக் குகைக்குள்ளே போனவுடனே நாகம் சீறிற்று; அத்தருணத்தில் அந்தக் குகைக்குள்ளே பளபள வென்று ஒரு ஒளி உண்டாயிற்று. அந்த ஒளிக்குப் பின்னால் ஜோஷியக்கிழவி கழுத்திலே நாகத்தைச் சுற்றிக்கொண்டு வெகு பயங்கரமாக நின்றாள். அவளைப்பார்த்து மோகனம் மனஞ்சலியாமல் தானே தைரியமாயிருந்தாள். அவளைப்பார்த்து அந்தக்கிழவி, "பெண்ணே! உன் அதிர்ஷ்டத்தைத் தெய்வவாக்கு வந்து சொல்கிறது கேள்: நீ கன்னிகையாகவே யிருக்கமாட்டாய்; சீக்கிரமே கடிமணமாகும்! நீ

மேலான கவுரவம் பெற்று வாழ்வாய்; குழந்தாய் மோகலாயராஜன் அரண்மனைக்குப்போ; நல்ல பாக்கியம் உண்டாகும்; இல்லாவிட்டால் இங்கே பள்ளர்களோடு கூடவேதான் காலம் கழிக்க வேண்டும்! உன் அதிர்ஷ்டத்தைக் கண்டாயிற்று; புறப்பட்டுப்போ வென்றாள். உடனே அங்கிருந்த ஒளி மழுங்கிப்போயிற்று. மோகனமும் அந்தக் குகையை விட்டு வீடு போய்ச் சேர்ந்தாள். அந்த ஜோஷியம் நேராய்க் கடவுளே வந்து சொன்னதாக எண்ணி உடப்பு பூரித்து அவள் அன்று முதல் அதையே சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

இப்படியிருக்க ஒருநாள் மோகனம் தகப்பனைப்பார்த்து, ஐயா, மோகலாய ராஜதானியைப்பார்க்கவேண்டுமென்று எனக்கு மிக்க ஆவலாயிருக்கிறது. ஏனென்கிறீரோ? மகம்மதியர்களுக்கு உயர்ந்த ஜாதியாரிடத்திலேயே பகை அதிகம். அவர்கள் பள்ளரை அவ்வளவாகப் பகைப்பதில்லை; நமது செல்வத்தினாலாவது நமக்கு அங்கே கொஞ்சம் மரியாதை கிடைக்காதா? போய் வரலாமென்றாள்.

அதைக்கேட்டு அவன் அப்படியே ஆகட்டும்; அதற்கு யாதொரு தடையுமில்லை; மேலும் நான் முன்னொரு காலத்தில் மொகலாய ராஜாவினுடைய உயிரைக்காப்பாற்றி யிருக்கிறேன்; அப்போது அவர் கொடுத்த பெருங்கொடையினாலே தான் நமக்கு இந்த ஐசுவரியமெல்லாமுண்டாயது. அந்த ராஜா கொஞ்சகாலம் தேசாந்திரங்களிலே திரிந்து, சிறிது காலமாய்ச் சிங்காஸனம்பெற்று வெகு நீதியாய் ராஜ்ய பரிபாலனம்பண்ணிவருகிறார். நாம் இப்போது அவரைப் போய்ப் பார்ப்பது நல்லதுதான்; ஒருவேளை முன் ஞாபகம்வந்து நம்மை அவர் விசேஷமாய் ஆதரித்தாலும் ஆதரிப்பார்; நன்மை உண்டானமட்டும் உண்டாகட்டும்; போவோம் வா என்றான்.

அப்படியே அவர்களெல்லாரும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு டில்லிப் பட்டணம் போய்ச் சேர்ந்த சிலநாளில் மோகனம் என்கிற பெண்ணினுடைய அழகும் சாமர்த்தியமும் கொஞ்சம் கொஞ்சமாய் அப்பட்டணத்தில் பிரசித்தியாகத் தலைப்பட்டது. மகம்மதியர்போலப் பள்ளர்வீட்டுக் குள்ளேயே மூடிக்கொண்டிருக்கிறவர்களல்லராதலால், அந்தப்பெண் கடை, காட்சி முதலிய இடங்களுக்குப் போவாள்; அங்கங்கே அவளைப் பலபேரும் பார்ப்பார்கள். அவளைப் பார்த்தவர்களுள் அவளுடைய சௌந்தரியத்தைக்கண்டு ஆச்சரியப்படாதவர் ஒருவருமில்லை.

அப்படியிருக்க ஒருநாள் காலையில் மோகனம் கடைத்தெருவு வழியாகப்போனாள். அப்போது அங்கே கூட்டம் அதிகமாய்க் கூடியிருந்ததினால் அந்தக் கும்பலின் நடுவே போகிறபோது ஒரு பல்லக்குக்கிடைபட்டு அவள் கீழே விழுந்தாள். அதைக்கண்டு அண்டையிலிருந்த ஜனங்கள் கூவின கூச்சலைக்கேட்டு அந்தப் பல்லக்குக் குள்ளிருந்த மனிதன் சரேலென்று பல்லக்கை விட்டிறங்கி அந்தப்பெண்ணைப்பார்த்து அவளை யெடுத்துப் பல்லக்கில் விட்டுக்கொண்டு அவள் வீட்டுக்குப் பல்லக்கைக் கொண்டுபோகச்சொல்லி தான் பல்லக்கைப் பிடித்துக்கொண்டு காலாலேயே நடந்துபோனான்.

தான் ஒருநாளும் பார்க்காத ஆடம்பரங்களோடு பல்லக்கு ஒன்று தன்வீட்டு வாயலில் நுழையக்கண்டு மோகனத்தின் தந்தையான பள்ளன் இதென்னவென்று பிரமித்து தனக்கு ஏதோ அபாயம் வந்துவிட்டதென்றெண்ணி வெளியே ஓடப்பார்த்தான். தன்பெண்ணை அந்தப்பல்லக்கில் அடைத்திருக்கப் பார்க்கவே துக்கம் அதிகரித்து கோவென்று கதற வாரம்பித்தான். அதுகண்டு அந்தப்பெண் சீக்கிரம் பல்லக்கை விட்டிறங்கித் தகப்பனைச் சமாதானப்படுத்தி நடந்த வர்த்தமானத்தைச்சொல்லி

அவனை களிக்கச் செய்தாள். அதைக்கேட்டு அப்பள்ளன் அந்த மனிதனை உபசரிக்க, அவனும் அவ்வேளை அவர்களோடு அவ்வீட்டிலேயே சுகமாயிருந்து அங்கேயே போஜனமும் பண்ணினான். அதுகண்டு, இதென்ன! இந்தப் பிரபு பள்ளன், வீட்டில் போஜனம் பண்ணினதென்று யாவரும் ஆச்சரியப் பட்டார்கள். பின்பு அவன் நான் அடிக்கடி இங்கேவந்து உங்களைக் கண்டுகொள்கிறேனென்று சொல்லிவிட்டு வீட்டுக்குப்போனான்.

இவ்வளவு காரியஞ்செய்த மனிதன் உமாயூனுடைய மந்திரியான பிராம்கான் என்பவனுடைய மகன்; அரண்மனையிலுள்ள அழகிய இராஜஸ்திரீகள் எத்தனையோபேர் தன்மேல் ஆசைகொண்டிருக்க அவர்களையெல்லாம் விட்டு மோகனத்தைப் பார்க்கும்போதே அவன் அவளிடத்தில் ஆசைகொண்டான். வேண்டாமென்று யாவரையும் கழித்த மோகனமும் அவனைப் பார்த்தபோதே இவன்தான் நம்முடைய நாயகனென்று எண்ணினாள்.

(இன்னும் வரும்)

———:(❋):———

## The Madras Legislative Council.

## சென்னை சட்ட நிருபணசபை மீட்டிங்கு.

———✦———

### ஜனவரி மீ 4உ கூடிய மீட்டிங்கு.

நாளது ஜனவரி மீ 4உ சனிக்கிழமையன்று சென்னை கவர்னருடைய சட்ட நிருபண சபை முதல் முதல் கூடிற்று. அதன் மெம்பர்கள் எல்லாரும் சென்ற மாசம்தான் புதிதாக நியமிக்கப்பட்டார்கள். எலெக்ஷன் மூலமாகத் தெரிந்தெடுக்கப்பட்ட ஜனப்பிரதிநிதிபவர்கள் தவிர கவர்னரும் 21-மெம்பர்களை நியமித்தார். இவர்களில் அனேகர் உத்தியோகஸ்தர்களாயினும் உத்தியோகஸ்தரல்லாதவர்களும் மெம்பர்களாக நியமிக்கப் பெற்றார்கள். மகாகனம் பொருந்திய லார்ட் பென்ட்லண்ட் அவர்கள் உத்தியோகஸ்தரல்லாத மெம்பர்களுக்கெல்லாம் நல்வரவுகூறி அவர்களெல்லாரும் தன்னயம்பாராட்டாது பொது விஷயத்தில் பொதுஜன க்ஷேமார்த்தம் ஒத்துழைக்க வேண்டுமென்றும் அவரும் எக்ஸிகியூடிவ் கவர்ன்மெண்டு மெம்பர்களும் சட்ட நிருபண சபை மெம்பர்களைத் தங்களுடைய சகாவாகப் பாராட்டி பொதுநலத்துக்காக அவர்களோடு ஒத்துழைக்கக் கோருகிறார்களென்றும் அப்படியே அவர்களும் பக்ஷபாதம் சயநயம் பாராட்டாது அவர்களோடு ஒத்துழைப்பார்களென்று நம்புவதாகவும் வெகு விநயமாகச் சொன்னார்.

பிறகு கனம்பொருந்திய பி. எஸ். சிவசுவாமி ஐயரவர்கள் முனிசிபல் ஆக்ட்டைச் சீர்திருத்துவதற்கான மசோதாவொன்று கொண்டுவர, அனுமதி கேட்டார், ஹைகோர்ட்டார் செய்துள்ளவொரு தீர்ப்பினால் முனிசிபாலிடியார் மார்க்கெட்டு வரி முதலிய சில வரிகளை குத்தகைக்கு விட்டு வசூல் செய்வது முடியாமல் போய்விட்டதென்றும் அந்தக்குறையை நிவர்த்திக்க ஒரு மசோதா கொண்டுவர வேண்டியதாயிற்றென்றும் சொன்னார். கனம் அட்வோகேட் ஜெனரல் மிஸ்டர் கார்பெட் அவர்கள் ஆமோதித்துப்பேச சபையார் அம்மசோதாவை ஆலோசனைக்குக் கொண்டுவர அனுமதி கொடுத்தார்கள்.

இத்தருணம் கனம் டாக்டர் நாயர் எழுந்து டில்லியில் நடந்த அக்கிரமத்தைக் குறித்து அச்சபை உத்தியோகஸ்தரல்லாத மெம்பர்கள் எல்லாரும் அச்செய்கையைக்கண்டு வெறுப்புற் றிருப்பதையும், அவ்வித அக்கிரமச் செய்கைகளை யடக்க கவர்ன்மெண்டார் என்ன ஏற்பாடு செய்வதாயிருந்தாலும் அதற்கு அவர்கள் அனுகுணமா யிருப்பார்களென்றும் சொல்லி, கனம் வைஸ்ராய் லேடி ஹார்டிஞ்ச் இவர்களுக்குண்டான விபத்தை யுன்னி யெல்லாரும் மனமுருகி வருந்துவதைத் தெரிவித்தார். இதை கனம் கிருஷ்ணராவு பஹதூர் அவர்கள் ஆமோதிக்க கனம் பொருந்திய கவர்னர் அவர்கள் அதை யேற்றுக்கொண்டு இராஜப் பிரதிநிதி யவர்களுக்கு அவர்களுடைய அனுதாபத்தைத் தெரிவிப்பதாக ஒப்புக்கொண்டு மகாகனம் பொருந்திய லார்ட் அண்ட் லேடி ஹார்டிஞ்ச் அவர்களுக்கு நேர்ந்த விபத்து மிகவும் பொறுக்கரிதாயினும் அதை அவர்கள் தைரியமாயும் மனம் கலங்காமலும் பொறுத்து வருவதற்காக அவர்கள் பெருமையையும் பொறுமையையும் மெச்சிப் பேசினர்.

பிறகு கனம் ஸர் ஹாரல்டு ஸ்டீவர்ட் அவர்கள் அக்கிராசனம் வகிக்க பைனான்ஸ் கமிட்டிக்கு உத்தியோகஸ்தரல்லாத மெம்பர்கள் ஆறு பிரதிநிதிகளை நியமித்தார்கள். அவர்கள் பேர்:—கனம் டாக்டர் நாயர், டி. வி. சேஷகிரி அய்யர், இராமச்சந்திர ராவ், வி. கே. இராமானுஜாசாரியர், பி. கேசவபிள்ளை, ஸர். எப். ஜெ. இ. ஸ்ப்ரிங். இந்த அறுவரோடு உத்யோகஸ்தர்கள் அறுவர்கூடி அடுத்த வருஷத்து வரவு செலவுக் கணக்குகளைப் பரிசோதிப்பார்கள்; அடுத்த கௌன்ஸில் மீட்டிங்கு பிப்ரவரி மீ 18உ செவ்வாய்க்கிழமைகூடும். பிறகு ஸ்ரீமான் சேலம் வி. விஜயராகவாசாரியாரும், நவாப் ஸயிட் மாமூது அவர்களும் வைஸ்ராய சட்ட நிரூபண சபைக்குப் பிரதிநிதி மெம்பர்களாகத் தெரிந்தெடுக்கப்பட்டார்கள்.

—:*:—

## The Delhi Outrage
## Sympathy of the South Indian Masses.

—:-:—

Mr. C. V. Swaminathiyar of the Diffusion of Knowledge Agency, Madras, voicing the sentiments of the South Indian masses, has wired to the Private Secretary to His Excellency the Viceroy as follows:—Pray convey abhorrence of the diabolical outrage and people's heartfelt sympathy and prayers for His Excellency's speedy recovery.

The following reply has been received from the Private Secretary to His Excellency the Viceroy:—Viceregal Lodge, Delhi. The 31st December 1912.

Dear Sir, I have to acknowledge with many thanks, your message of Sympathy.

His Excellency is at present unable to attend to business, but your message shall be laid before him as soon as he has sufficiently recovered from his injuries, and I am sure that he will appreciate it greatly.

* * *

## Press Opinions the Viveka Chintamani.

THE "VIVEKA CHINTAMANI."—This useful and interesting Tamil Magazine for December opens with an article on the Principles of Progress, reviewing Professor Henderson's last lecture in Madras. It is followed by an article on the 'Origin of Life' in its collective aspect and another on 'Kartikai Festival.' The verses celebrating the birth of Kumara under Kumarasambavam are touching. The magazine is as usual full of a number of other interesting stories and contributions keeping its position as the oldest and the best Tamil monthly in Madras.

*The Madras Standard Dec. 13.*

The magazine is.........keeping up its position as the oldest and the best Tamil Monthly in Madras."

*—The Indian Patriot.*

* * *

*(Poojah Special Number.)*

The Viveka Chintamani for November issued as the "Poojah Special Number" is brimful of interesting matter from cover to cover. It opens with a well thought-out article on the Origin of Life discussing the "Evolution of the Soul," followed by an interesting and instructive illustrative story of a Mantra in the daily prayer of the Hindu, under the fairy headline "The Water of Life." "Betrayed" is another short story illustrative of the truth, "Your sin will find you out." Then comes the life of Sri Sankara followed by eleven verses celebrating the Navaratri Poojah 1912." This is followed by the mystic meaning of Dusserah and another instructive article on Dr. Horten's reply to Dr. Schafar declaring the "Final Problem of life" as being "still elusive" to the grasp of the materialistic mind, Tolstoy's Hygienic Maxims and the story "The Law of Life conquers" are good. But the palm is taken by the Spiritual address of Welcome to their Excellencies Lord and Lady Pentland in which "the Guardian Spirit of Madras" addresses Her Governor in lines of sixteen couplets which condense the root principles of Government or the control of thought and Sense perceptions by the higher powers of the uplifted soul or Self which is the rular of all. The graceful allusion to Her Excellency as the Co-efficient Sakti or Inspiring Energy of Her Lord who is the ordained ruler of this land is touching and will appeal to all.

*—The Indian Patriot.*

# நோட்டீசு.

—:(*):—

## 50,000 ரூபாய் இனும்.

டெல்லியிலுள்ள சாண்ட்னி சௌக்கில் 1912-ம் வருஷம் டிஸம்பர் மாஸம் 23-ந் தேதி யன்று இந்தியாவின் வைஸிராயான ஹிஸ் எக்ஸலென்ஸி லார்டு ஹார்டிஞ்சு அவர்களின் பேரில் வெடிகுண்டு எறிந்த துஷ்டனை, அல்லது துஷ்டர்களைப் பிடிப்பதற்கான செய்தி சொல்வோர்க்கு ஐம்பதினுயிரம் ரூபாய் வெகுமதி யளிக்கப்படுமென்று இதனல் தெரிவிக்கப்படுகிறது.

இது விஷயமாய்ப் போலீஸார் விசாரித்துக் கொண்டிருப்பதில் அவர்களுக்கு உதவியாயிருக்கக் கூடிய எச் செய்தியை முன்னிட்டுச் சொன்னுலும் அல்லது வெடிகுண்டைத் தயார் செய்த மனிதர்களைக் கண்டுபிடிப்பதற்கு அனுகுணமான செய்தியைத் தெரிவித்தாலும் அல்லது இந்தப் பாதகச் செய்கையில் எவ்விதமான சம்பந்த முண்டாயிருந்த தென்ருவது தெரிந்து அறிவித்தாலும்—இவ்வித உதவிபுரியும் அவருக்கும் தகுந்த வெகுமதிகள் கொடுக்கப்படும்.

டி. பெட்ரி,

அடிஷனல் சூபரின்டெண்டெண்டு
ஆவ் போலீசு,
டெல்லி.

D. PETRIE,

Additional Superintendent of Police,
DELHI.

1912 ஹு டிஸம்பர் மீ 30-உ

# "THREE WORDS OF STRENGTH."

—(*)—

## "HOPE, FAITH AND LOVE."

I

Hardinge, My Lord, true-hearted Son of Man
On bended knees I bow to the Christ in thee
And pray to the Voice of Faith that urged "Go On!"
Heeding not the demon that tore thy flesh from thee!

II

England's Empire over the raging seas
She owes to Nelson's Voice of † Duty t' be done!
England's Empire over the Mind that feels
That "Lady with the lamp" ‡ founded on her "Duty done'!

III

England's Empire over our people's heart
The Mother-heart of Victoria the Good did found!
But the Empire of Man over hearts that smart
Thy Voice of 'Faith that faltered not' *alone* could found!

IV

Henceforth 'n Imperial Delhi's Crown shall stand
Thy Glorious Form of Faith on Elephant mounted
The 'ternal symbol of the Spirit that stand
And guide a Nation's path to the Goal it counted.

V

The Sovereign-Lord his message of Hope did give;
Our own true Lord, the Viceroy, gave us Faith!
'Tis now India's turn Her Supreme Message to give:
And that's *Love to thee and thine surpassing both Hope and Faith.*

ANANDA MISSION,
LALITALAYA,
MADRAS, S.

C. V. SWAMINATHAIYAR, K. S. S. A.

† "England expects every man to do his duty"

‡ Mis Florence Nightingale.

## The Story of Dhasarjuna

### தசார்ச்சுனன் கதை.

———:o:———

ஒரு பெரிய மலையின் அடிவாரத்தில் த்ரிவிக்ரமபுரியென்னும் ஒரு பட்டணமுண்டு. அந்த பட்டணத் தரசனாகிய பிரதாபசீலன் நற்குண, நற்பழக்கங்களை யுடையவன், மகா புத்திமான்: பிரதாபசீலனுக்கு ஜிதேந்திரியை யென்னும் ஒரு பெண் உண்டு. ஜிதேந்திரியை தன் தகப்பனார் அரண்மனையில் தன்னுடைய குமாரனாகிய தசார்ச்சுனனுடன் வசித்து வந்தாள். தசார்ச்சுனன் பிரதாபசீலனுடைய அரண்மனையில் வளர்ந்து வந்ததால் அவனுக்கு நல்ல பழக்கவழக்கங்களும் நல்ல மனப்பயிற்சியுமுண்டாயிருந்தது. தசார்ச்சுனனுக்கு தன் தகப்பனார் யாரென்று தெரியாது.

பிரதாபசீலனுடைய அரண்மனைக்குச் சமீபத்தில் ஒரு காடு உண்டு. ஜிதேந்திரியை தசார்ச்சுனனை அவன் குழந்தைப் பருவத்திலிருந்து அந்தக் காட்டிற்கு அழைத்துக் கொண்டுபோவாள். அங்கே போகிறபொழுதெல்லாம் ஜிதேந்திரியை பூமியில் புதைந்து கிடந்த ஒரு யாறையின்மேல் உட்கார்ந்துகொண்டு தசார்ச்சுனனோடு அவன் தகப்பனாரைப் பற்றி பேசிக்கொண்டிருப்பாள். அதிலிருந்து தசார்ச்சுனன் தன் தகப்பனார் அத்திக்கா என்னும் தேசத் தரசனான யஜஸ்சேன மகாராஜனென்றும், அவன் அதன் தலைநகராகிய ஏதேன் பட்டணத்தில் வசிக்கிறானென்றும் அறிந்து கொண்டான். தசார்ச்சுனன் தன் தகப்பனாரைப் பார்க்க ஆவல்கொண்டு தன் தாயைப் பார்த்து 'என் தகப்பனார் ஏன் என்னைப்பார்க்க வருகிறதில்லை' என்று கேட்டான். அதற்கு ஜிதேந்திரியை, ஒரு அரசன் அவனுடைய குடிகளைத் தன் குழந்தைகள்போல் நேசித்து பரிபாலிக்க வேண்டுமென்றும், அவனுடைய தகப்பனார் தன் சொந்தப்பிள்ளையைப் பார்ப்பதற்காக தன்ராஜாங்க வேலைகளை விட்டுவர முடியாது என்றும் சொன்னான்.

தசார்ச்சுனன் தாயாரைப் பார்த்து "அம்மா அவர் என்னைப் பார்க்க வராவிட்டாலும் நான் ஏன் ஏதன் நகரத்திற்குப் போய் நான் யஜஸ்சேன மகாராஜன் பிள்ளை என்று சொல்லிக்கொள்ள கூடாது?" என்று கேட்டான்.

அதற்கு ஜிதேந்திரியை, "அப்பா, அதற்குள் என்ன அவசரம்! நீ அங்கே போவதற்கு இன்னும், வயதாக வில்லையே" என்றாள்.

தசார்ச்சுனன் நான் எத்தனை வருஷம் காத்துக் கொண்டிருக்கவேண்டும் என்றான். ஜிதேந்திரியை உன்னை இந்தச்சிறுவயதில் அனுப்பக்கூடாது அப்பா! எங்கே பார்ப்போம்! நாம் உட்கார்ந்துகொண்டிருக்கும் இந்தப் பாறையை உன்னால் தூக்க முடியுமா!" என்றாள். தசார்ச்சுனன் தன் பலத்தை யெல்லாம் கொண்டு அதைத் தூக்கப்பார்த்தான். அந்தப்பாறையோ பூமியில் நன்றாய்வேரூன்றிப் புதைந்திருந்தது. தசர்ச்சுனனால் அதைத் தூக்கமுடியவில்லை. ஜிதேந்திரியை, தசார்ச்சுனனைப் பார்த்து "அப்பா நீ இந்தப் பாறையைப் புறட்டித்தள்ளி அதின் அடியிலிருப்பதை எனக்கு காண்பிக்க உனக்கு சக்தியுண்டானால் உன் பிதாவைபார்க்கப் போகலாம்" என்றாள்.

தசார்ச்சுனன் தன்தாயாரைப் பலதடவை தான் போக விடை கேட்டும் ஜிதேந்திரியை அதற்கு பதிலாக அந்தப்பாறையை சுட்டிக்காட்டி அதைப்புறட்டி அதினடியிலிருப்பதை எடுத்து தனக்குக்காண்பித்தாலொழிய போகக் கூடாது என்றாள்.

தசார்ச்சுனன் தன்னால் கூடியமட்டும் கஷ்டப்பட்டு அந்தப்பாறையைத் தூக்கப்பார்த்தான்; அந்தப்பாறை இவன் தூக்கத் தூக்க இன்னும் கொஞ்சம் ஆழமாய் புதையத் தொடங்கிற்றே ஒழிய மேலேயெழும்பவில்லை.

ஒருநாள் தசார்ச்சுனன் அதைப்புறட்ட முயன்றபொழுது அந்தப் பாறை கொஞ்சம் எழும்பிற்று. ஆனால் அவனால் அதைப்புறட்ட முடியவில்லை. இன்னும் ஒருவருஷம் கழிந்தபிறகு தசார்ச்சுனன் அந்தப் பாறையைப்புறட்ட முயன்றான். அவன் இப்பொழுது முன்னிருந்ததைவிட மிகவும் பலிஷ்டனாக இருந்ததால் அந்தப்பாறையை அவன் சிரமப்பட்டுத் தூக்கிப்புறட்டித்தள்ளினான். அதனடியில் தங்கப்பிடி போட்ட ஒருபட்டாக்கத்தியும் பாதக்குறடும் இருந்தன. அவற்றை எடுத்துத் தன்தாயாருக்கு காண்பித்தான்.

இவன் அந்தப்பாறையைப்புறட்டினபொழுது ஜிதேந்திரியை தன் மகனுடைய பல பராக்கிரமத்தைக் கண்டு சந்தோஷமும் தன் ஒரேமகன் தன்னைவிட்டுப் போகப் போகிறானே யென்று விசனமும் கொண்டிருந்தாள். ஜிதேந்திரியை அந்தப் பட்டாகத்தியையும்

பாதக்குறடையும் பார்த்து தசார்ச்சுனனை நோக்கி "அப்பா தசார்ச்சுனா! அந்தபட்டாக்கத்தியும், பாதக்குறடும் உன்தகப்பனுருடையது. அவர் அந்திக்கா தேசத்தை அரசாள என்னை விட்டுப் போன பொழுது அவர் நீ இந்தப் பாறையைப் புரட்டி அதினடியில் அவருடைய பட்டாக்கத்தியையும் பாதக்குறடையும் வைத்து அதன்மேல் இந்தப் பாறையை மூடி, இந்தப் பாறையைப்புரட்டி அந்தப் பட்டாக்கத்தியையும் பாதக்குறடையும் எடுத்துக் கொள்ள உனக்கு சக்தி வருகிறவரையில் உன்னைக் குழந்தையாகவே பாவிக்கும்படி சொல்லிவிட்டுப் போனார்."

தசார்ச்சுனன்' அம்மா ஆனால் நான் இப்பொழுதே புறப்பட்டுப் போகிறேனென்றான்.

ஜிதேந்திரியை அவன் பிரயாணத்திற்கு வேண்டிய சாமான்களை சேகரிப்பதற்காக இரண்டொரு நாள் தங்கும்படிக்கு கேட்டுக் கொண்டாள். பிரதாபசிலன் தசார்ச்சுனன் எதன் நகரத்திற்கு தன் தகப்பனுரைப்பார்க்க போகப்போகிறான் என்பதை கேள்விப்பட்டதும் அவன் தசார்ச்சுனனைக் கப்பலேறிபோகும்படி புத்திமதிசொன்னான். ஏனென்றால் அந்தக் காலத்தில் ஒரு நகரத்திற்கும் இன்னொரு நகரத்திற்கும் காட்டுப்பாதையே தவிர இந்தக் காலத்திலிருப்பது போல சரியான நடபாதைகள் கிடையா. காட்டுப்பாதைகளில் திருடர்களும், அவலக்ஷணமான கொடிய காட்டுமனிதர்களும் நிறைந்திருந்து அவ்வழி போன பிரயாணிகளை வதைசெய்துகொண்டு வந்தார்கள்.

தசார்ச்சுனன் காட்டுப்பாதையில் திருடர்களும் காட்டுமனிதர்களுமிருப்பதால், அந்த வழியாகத்தான் போகவேண்டு மென்றான். பிறகு மூன்றுநாள் பிரதாபசிலனிடமும், தாயாரிடமும் விடைபெற்றுக்கொண்டு காட்டுப்பாதை வழியே சென்றான். போகும் வழியிலெதிர்ப்பட்ட திருடர்களையும், கொடிய காட்டுமனிதர்களையும் கொன்றுகொண்டே போனான். சீக்கிரத்தில் பிரதாபசிலனுடைய குடிகளை வருத்தின திருடர்களெல்லாம் அநேகமாய் ஒழிந்து போனார்கள் தசார்ச்சுனனால் இறந்த திருடர்களில் பிராகிருஸ்டெஸ் Procrustus என்பவனும் ஒருவன். அவனிடம் அகப்பட்ட ஜனங்களை அவன் வெகு குரூரமாய் நடத்தினான். அவனுடைய குகையில் ஒரு படுக்கை போட்டிருந்தான். பிரயாணிகளை மகா வினயத்தோடு அழைத்து உபசாரம் செய்து அந்தப் படுக்கையில் படுக்கச் செய்வான். அந்தபடுக்கைக்குக் கொஞ்சம் நீளமாயிருந்தால் தலையையாவது காலையாவது வெட்டியும், குட்டையாயிருந்தால் பலாத்காரமாய் அந்த படுக்கைக்கு சரியாக காலை இழுத்தும், அதனால் அவர்கள் படும் வருத்தத்தைக் கண்டு சந்தோஷமடைந்து வந்தான். ஸிகினிஸ் என்னும்திருடன் அவனிடம் அகப்பட்டுக் கொண்ட பிரயாணிகளை ஒரு குன்றுக்கு அழைத்துக்கொண்டு போய் அங்கே அவர்கள் காலைவாரி சமுத்திரத்தில் வீசி எறிவான். அதனால் ஜனங்கள் தரையில் விழுந்து உடம்பு சிதறியாவது, சமுத்திரத்தில் விழுந்து முழுகியாவது இறந்துபோவார்கள். தசார்ச்சுனன் ஸிகினிஸ் என்னும் திருடனை அவன் மற்றவர்களைச் செய்வதுபோல அவனை குன்றின்மேல் நின்றுகொண்டு காலைவாரி வீசி எறிந்தான். சமுத்திரராஜன் அந்தத் திருடனை தனக்குள் அடக்கிக்கொள்ள இஷ்டப்படாததாலும், பூமாதேவி அவனை மறுபடியும் சுமக்க இஷ்டப்படாததாலும் ஸிகினிஸ் என்னும் திருடன் ஆகாயத்திலேயே ஒரு மரத்தில் கால்கள் அகப்பட்டுக்கொள்ள அங்கேயே தலைகீழாக தொங்கிக்கொண்டிருந்தான்.

இவன் வழியிலிருந்த ஒரு கிராமத்தில் ஒரு காட்டுப்பன்றி பயிர் பச்சைகளை அழித்துக்கொண்டு வந்ததால் தசார்ச்சுனன் அந்தப் பன்றியைக் கொன்றான். இவன் இந்தமாதிரியாக துஷ்டநிக்ரஹம் பண்ணிக்கொண்டு ஏதேன் நகரம்போய்ச் சேர்ந்தான். இவன் போவதற்கு முன் இவன் மகாபலசாலி என்று எல்லாராலும் கொண்டாடப்பெற்று இவனுடைய கீர்த்தியானது ஏதேன் நகரமுழுவதும் பரவியிருந்தது. இவன் ஏதென் நகரத்தில் பிரவேசித்தபொழுது ஜனங்களெல்லாரும் தங்களரசனாகிய யஜஸ்சேன மகாராஜாவினுடைய குமாரனான தசார்ச்சுனனைப் போல பலசாலி உலகத்தில் எவனும் இல்லை என்று பேசிக்கொண்டிருந்தார்கள். தன்னுடைய பிரதாபம் எங்கும் பரவியிருப்பதைக்கண்டு தார்ச்சுனன் மனம் பூரித்துதன் தகப்பனாரையும், அவர்தன்னைப் பார்த்ததும் எவ்வளவு சந்தோஷப்படுவார் என்பதையும் நினைத்துக் கொண்டே தன் தகப்பனார் அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

——:-:——

## Co-operative Weaving.

### கூட்டுறவு நெசவு.

—:*:—

இந்தியாவில் விவசாயத்திற்கு அடுத்தபடியான, அல்லது விவசாயம் எவ்வளவு பிரதானமாய்க் கருதப்படுகிறதோ அவ்வளவு பிரதானமாகவே யிருப்பது கைத்தொழில். கொல்லத்து வேலை, தட்டாரவேலை, கம்மாள வேலை போன்ற தொழில்கள் எல்லாம் கைத்தொழிலில் சம்மந்தப்பட்டதற் கிணங்க நெசவுத் தொழிலும் கைத்தொழிலுக்குள் அடங்கியதே யாகும். வயிறு வளர்ப்பதற்கு, அதாவது வயிறு நிரம்ப உண்டு ஜீவாத்மாவைப் பாதுகாத்துக்கொள்வதற்கு நாம் உண்ணும் உணவுக்காதாரமான தானியாதிகளைப் போலல்லாமல் நெசவுத்தொழிலானது பகுத்தறிவுடைய மானிடர்களின்மானவமானத்திற்கும் சீதோஷ்ண நிலைக்கிணங்கிய தன்மையைப் பாதுகாப்பதற்கும் சாதனமான வஸதிரங்களுக்கு உரியதாகின்றது. இவ்விதமான நெசவுத் தொழில் எவ்வளவு தூரம் விருத்தியடைய வேண்டுமோ அவ்வளவு தூரம் விருத்தி முகங் காட்டுவதாய்க் காணோம். சமீபத்தில் எடுக்கப்பட்டகனிஷமாரி என்கிற ஸென்செஸ கணக்கின் பிரகாரம் கைக்கிளவ ஜாதியார் முன்னிலும் பதின்மடங்கதிகமாக நெய்தொழிலிற் கவனஞ் செலுத்தி, தாம் வயிறு வளர்க்க வேண்டி வருகிறது. மிகவும் முக்கியமானதாயுள்ள இந்தத் தொழிலின் நிலைமை இவ்வளவு தூரம் மலினமானதற்கு அனேகர் அனேகவிதமாய்க் காரணங் கூறுகிறார்கள். நாகரிக மிகுந்த தேசத்தவரெல்லோரும் ஒரு தரம் இந்தியாவிலுள்ள நெய்தொழில் வேலையைக் கண்டு பிரமித்தும் சிலாகித்தும் பேசியிருக்கிறார்களென்றால் இத தொழில் முறை எப்படிப்பட்ட மேன்மையிலிருந்திருக்கவேண்டு மென்பதை யாம் சொல்ல வேண்டுவதனவசியம். இந்தியாவானது பருத்தி விளையும் பெருத்த நாடாயிருந்தாலும் இவ்விடத்தில் விளையும் பருத்தி இவ்விடத்திலேயே நெசவு பெறாமல் வெளிதேசங்களுக்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றன. இத்தேசத்தினின்றும் அனுப்பப்படும் பருத்தி பேல்கட்டுகள் யந்திரவிசைகளைக் கொண்டு செய்யப்படுகின்ற ஸன்னமாக வஸ்திரங்களாய்த் திரும்ப நம்மதேசம் வந்து சேருகின்றன. தேசத்திலேயே நெசவு வேலை செய்துகொண்டு பிழைக்கு நெசவுக்காரர்கள் தறிபோட்டுப் பாவிழுத்துத் துணி நெய்தால், யந்திரத்தில் நெய்யப்படும் துணிக்கு எவ்வளவு நேரமாகுமோ அதைப் பார்க்கிலும பத்துமடங்கு அதிக காலம் வேண்டியிருக்கிறது. நெசவுகாரன் தன் வேலைக்கான காலத்திற்குத் தகுந்தபடி தான் நெய்த வஸ்திரத்திற்கும் விலை வைக்கவேண்டியவனாயிருக்கிறான். இப்படி இவன் நெய்த வஸ்திரத்தின் விலை அதிகமாயிருக்க, வெளி தேசங்களில் யந்திரங்களின் உதவியைக் கொண்டு நெய்யப்பெற்ற வஸ்திரத்தின் விலை மிகவும ஸரஸமாயிருக்கிறது. சாதாரணமாகச் சரக்குகளின் பான்மையைக் குறித்து ஜனங்கள் கவனிக்கிறதில்லை. அதிக கிராக்கியாயில்லாமல் விலை நயமாய் எங்கு இருக்கிறதோ அங்கேயே ஜனங்களுக்கு நாட்டம். அது காரணமாகத்தான் நாட்டு வஸ்திரங்கள் ஓங்குவதில்லை. இதல்லாமலும் உள்ளூர் நெசவுக்காரர்குப் போதுமான முதல் கிடையாது. அப்போதும தம்முன்னோர் செய்து வந்த வகையே பின்பற்றும தன்மை கொண்டிருக்கிறார்களேயல்லாமல் நவீனமாய் யேற்பட்டிருக்கும் யந்திர விசைகளை முன்னிட்டு அதன் துவாரா நெசவு தொழிலை விருத்தி செய்து லாபம் பெற வேண்டுமென்ற ஆசக்தி கிடையாது. மேலும் நெசவுகாரருக்குள் பரஸ்பரம் நம்பிக்கை வேண்டுமென்பதையும் அவர்கள் கவனிக்கவேண்டும், சில தினங்களுக்கு முன் இச்சென்னைமா புரியில கூடிய கூட்டுறவு கான்பரென்ஸில் காஞ்சிபுரம் கோவாபரேடிவ் வீவர்சு யூனியனைச்சேர்ந்த மிஸ்டர் பி. ராமச்சந்திர சாஸ்திரியார் கூட்டுறவுடன் நெசவுதொழில் செய்வதைக் குறித்து ஓர் அருமையான வியாசமெழுதிப்படித்தார் மகா ஜனங்கள் எல்லோரும் அதைச்செவ்வையாய்த் தெரிந்துகொள்வது அவசியம்.

—:(*):—

## குறிப்புகள்.

:(o):

கண்ணடி, கடியாரம்.—ஜர்மன் தேசத்திலுள்ள பவேரியா நாட்டில் கண்ணடி மெழுகிடுமொருவன் ஆறு வருஷம் சிரமபட்டுக் கண்ணடியால் ஒரு கடியாரஞ் செய்திருக்கின்றான். அக்கடியாரத்தில் கண்ணடி தவிரப் பிறபொருள்களின் சேர்கை சிறிதுமில்லையாம்.

இரும்பு மலை.—அமெரிக்காவிலுள்ள மெக்சிகோவைச் சேர்ந்த டுராங்கோ என்னுமிடத்தில் 400 அடி உயரமுள்ள ஓர் இரும்பு மலையிருக்கின்றது. அது $1\frac{1}{4}$ மைல் நீளமும் $\frac{3}{4}$ மைல் அகலமுமுடையதாம்.

உயரமுள்ள ஸ்திரீ.—உலகத்துள்ள ஸ்திரீகளுள் பிரேசிலியன் பிரனெல்ட் என்பவள் மிகவும் உயரமுள்ளவளாம். அவள் 1 அங்குலங் குறைய 8 அடி உயரமாக விருக்கின்றனள். அவளுக்கிப்போது வயது 18 ஆம்.

சாப்பாட்டுடன் ஜலபானஞ்செய்வது ஆவசியகமா?—சாப்பாட்டுடன் ஜலபானஞ் செய்யின் அஃது அஜீரணத்தை யுண்டுபண்ணுகின்றதென்று பலர் ஜலபானஞ் செய்வதேயில்லை. அவ்வாறு செய்வது தேகத்திற்குக் கெடுதியை விளைவிப்பதாமென்று "மாண்ட்ரீல் ஸ்டார்" கூறுகின்றது. ஒரு வைத்திய கலாசாலையில் இவ்விஷயமாக வைத்திய மாணவர்கள் பரீட்சிக்கப்பட்டனர். போஜனத்துடன் இரண்டு டம்ளர் ஜலம் குடித்துவந்த மாணவர்கள் திடகாத்திர சுகசரீரிகளாக விருக்கக் காணப்பட்டனர். இவர்களுள் 8 பேர் போஜனத்துடன் ஜலபானஞ்செய்யாது ஒவ்வொரு சாப்பாட்டிற்கு மிடையிடையே தாகசமனஞ் செய்வதற்கு வேண்டும் ஜலம் பானஞ்செய்யுமாறு உத்தரவிடப்பட்டனர். வேறு 8 பேர் போஜனத்துடன் ஒரு புட்டி ஜலமும், ஒவ்வொரு சாப்பாட்டிற்கு மிடையே வேண்டிய அளவு ஜலமும் பானஞ் செய்யுமாறு உத்தரவு செய்யப்பட்டனர். முதல் 8 பேர்களுள் ஒருவர் நீங்கலாக 7 பேருக்குத் தேகநிறை குறைவுப் பட்டிருந்தது; மேலும் அவர்களுக்குத் தலைவலியும், மலபந்தமு முண்டாயின. இரண்டாவது 8 பேர்களுள், ஒருவர் தவிர 7 பேர் தேக நிறை மிகுதிபெற்றனர்; அவர்களுள் ஒருவருக்கும் மலபந்தனமும், அஜீரணமு முண்டானதாகக் காணப்படவில்லை.

அக்கிக்கு ஒரு மருந்து.—பெரியவர்களுக்குச் சரீரத்தில் பட்டை பட்டையாய் சொனப்புகள் வந்தால் அதற்குக் கடி யென்கிறார்கள்; குழந்தைகளுக்கு வந்தால் சொரியென்றும் அக்கியென்றும் சொல்லுகிறார்கள். இதற்கு எத்தனை யோ விதமான சிகிச்சைகள் இருக்கின்றன. ஆனாலும் அதிக பணம் செலவிடாமல் இரண்டொரு பைஸாவில் ஆகக்கூடிய சிகிச்சை யொன்றை ஒரு பிரபல வைத்தியர் இப்போது செய்து வருகிறார். அனேகருக்குக் குணமாயுமிருக்கிறது. எரிச்சல் எடுக்கும்படியான திராவகாதிகளைப் போட்டு சொரியையோ அக்கியையோ, அல்லது கடியையோ ஆற்றுவதைக் காட்டிலும் சுலபமாய் ஒரு மருந்து சொல்லுகிறார். அது சர்வ சாதாரணமானது. எங்கும் கிடைக்கக் கூடியது, எல்லோரும் பரிவுடன் உபயோகிக்கக் கூடியது. அதாவது கற்றாழையின் மேல் தோலைச் சீவிவிட்டு உள்ளிருக்கும் சோற்றை யெடுத்து ஒரு தட்டில் போட்டுக்கொண்டு அத்துடன் வரளி மஞ்சள் என்று சொல்லப்படும் நீண்ட மஞ்சளையும் சேர்த்து அரைத்து அதை யெடுத்து அக்கியில் தடவினால் அது இருந்த விடந் தெரியாமல் பட்டுப் போய் விடும். ஒவ்வொரு குடும்பத்துக்கும் இது அவசியம் தெரிந்திருக்கவேண்டிய ஔஷதமாகும்.

———:-:———

# The Swiss American Watch Co.

## Direct Importers, Rattan Bazaar Row, Madras.

### N. A. VENKATARAMANJULU NAIDU.

**Watch Maker of 25 years' experience,**

Late Watch repairer of Messrs P. Orr & Sons, T. R. Tawker & Sons, Framjee Pestonji Bhumgara,

Late S. C. Coombes & Co., Rangoon, Loco-workshop, Burma Railway. R. C. Nath & Son. Rangoon.

## ஸர்தார்



இது மேல் சாவி போட்டு கனத்த கண்ணாடியால் மூடியுள்ளது. மிகவும் சரியான காலத்தைக் காட்டும். வெகு நாளைக்கு ஓடக்கூடியது. வெகு நேர்த்தியான கை கடியாரம். ரயில்வே உத்தியோகஸ்தர்களுக்கு ஸப்ளை செய்யப்படுகிறது. மிகவும் சிறந்த "லீவர்" கடியாரம் விலை ரூ. 10.

## உத்தியோகஸ்தர்



இது உத்தியோகஸ்தர்களுக்கென்று ஸ்பெஷலாக செய்யப்பட்ட கடியாரம். மேல்சாவி போட்டு ஒரு பக்கம் கனத்த கண்ணாடியால் மூடியுள்ளது. சரியான காலம் காட்டும். முரட்டுத்தனமாயுபயோகித்தாலும் கெட்டுப் போகாது. கைக்சடக்கமாகச் சிறிதாயும் அழகாயும் திருப்திகரமாயுமிருக்கும். தபாற்கூலி யுள்பட விலை ரூ. 8.



வெஸ்ட் எண்ட் வாட்சு, நிகரற்றது. நிக்கல் கேஸ், மேலே கண்ணாடி போட்டது ரூ. 9.

வெஸ்ட் எண்ட் வாட்சு, நேர்த்தியான வெள்ளி மூடிபோட்டது. உயர்தர ஒப்பற்ற லீவர் கடியாரம் 5 வருஷத்துக்கு நாங்கள் ஜவாப்புதாரி. விலை ரூ. 15.

## ஸ்விஸ் அமெரிகன் வாட்சு கம்பெனி,

நேர கடியாரம் இறக்குமதி செய்யும் வியாபாரிகள்,

பெரம்புக்கடைத்தெரு, ஜார்ஜ்டவுன், மதராஸ்.

# PONNUSAWMY PILLAI & SON,

## 40, 41, 42, Rattan Bazaar Road,

## MADRAS.

---

நார்க்காலிகள், மேஜைகள், பீரோக்கள், கட்டில்கள், இன்னும் என்ன மர ஸாமான்கள் வேண்டுமானாலும் அனுப்பக்கூடும். எஜமானரே நேரே பார்ப்பதாலும், நல்ல மரத்தையும் தகுந்த தச்சர்களையும் கொண்டு வேலை செய்வதாலும் விலை மலிவாய்க் கொடுக்கக்கூடும். விலை கேட்லாக் வேண்டியவர்களுக்கு இனாமாக அனுப்பப்படும்.

**பொன்னுசாமி பிள்ளை அண்ட் ஸன்,**

40, 41, 42, பெரம்புக்கடைத் தெரு.

ஜார்ஜிடவுன், மதராஸ்.

---

இனாம்! இனாம்!! இனாம்!!

விலையுமில்லை தபாற் செலவுமில்லை.

## போலிச் சரித்திரம்.

—:—

வர்த்தக சம்பந்தமான சிறுபுத்தகம். இப்பொழுதுதான் வெளியாகியது. வாசிப்பதற்கு வெகு விநோதமாயுள்ளது. தமிழறிந்தோர் ஒவ்வொருவரும் வாசிக்கத்தக்கது பொது நன்மையைப் பெரிதுங்கொண்டுள்ளது. விலாசத்தைத் தெரிவிப்போருக்கு இனாமாய் அனுப்பப்படும்.

வைத்திய சாஸ்திரி
மணிசங்கர் கோவிந்தஜி,
ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
22, பிராட்வே மதராஸ்.

ஏஜண்டு:
M. A. நெல்லையப்ப முதலியார்,
38, சின்னகடைத்தெரு,
திருச்சினாப்பள்ளி.

## "இந்து நேசன்"

—(*)—

இது வாரம் இரு முறை, அதாவது பிரதி திங்கட்கிழமையிலும் வியாழக்கிழமையிலும் பிரசுரமாகி வரும் இனிய செந்தமிழ்ப் பத்திரிகை. இதில் கல்வி, கைத்தொழில், விவசாயம் இராஜாங்க விஷயங்கள், வியாபாரம், சுகாதார விதிகள், நற்குண நற்செய்கைகள் மிகுந்த பெரியோரது சரிதங்கள், உள்ளூர் வெளியூர் வர்த்தமானங்கள், பொது நலக்குறிப்புகள், கோர்ட்டு விஷயங்கள், பாலர்க்கும் பாலிகைகளுக்கும் உபயோகப்படத்தக்க விதிகள், மத விஷயங்கள், சுருங்கச் சொல்லின் தேச க்ஷேமாபிவிருத்திக்குரிய சகல அம்சங்களும் பொருந்தி, ராஜபக்தி ராஜ விசுவாசம், முதலியனவற்றுள் பற்றுண்டாகும் படி, எளிய செந்தமிழ் நடையில் தகுந்த கல்வியாளரால் எழுதி நடத்தப்பட்டு வருகிறது.

வருஷ சந்தா ரூ 5; ஆறுமாசத்துக்கு ரூ 2-8-0

மானேஜர் 'இந்துநேசன்'

18, லிங்குசெட்டி வீதி, ஜார்ஜ் டவுன் சென்னை.